

கோவை 24 மனை மருத்துவ மையத்தில் சுலோச்சனா மருந்தகம் திறப்பு விழா

காய்,கனி சிற்பக் கலை வித்தகர் இளஞ்செழியன்



ரூ.20/- | ஜூன் 2020 ஆனி | தீபம்: 8 ஒளி: 6

# 24 மனை குலமுரசு

தமிழ் மாத இதழ்

## மக்கள் சேவையே மகேசன் சேவை

# 24 மனை குலமுரசு

தமிழ் மாத இதழ்

RNI No.: TNTAM/2013/48200

தீபம்: 8 ஒளி: 6

ஜூன் 2020 ஆனி

24 மனை தெலுங்கு செட்டியார்கள் இனமக்களுக்காக
24 மனை தெலுங்கு செட்டியார்கள் சேரிட்டபிள் டிரஸ்ட்
அறக்கட்டளையால் நடத்தப்படும் அரசியல் சார்பற்ற சமூக மாத இதழ்

24 மனை தெலுங்கு செட்டியார்கள் தலைமைச் சங்கம்
கீழ்ப்பாக்கம், சென்னை – 600010.

சிறப்பாசிரியர்:
**கரூர் கே.சி.பழனிசாமி**
Ex.MP., Ex.MLA.,

ஆசிரியர்:
**Dr. துரை அங்குசாமி**
M.A.,B.L.S.,B.Ed.,Ph.D.,





24 மனை குலமுரசு,
330/1, சின்னாண்டான் கோவில் வீதி,
கரூர் - 639001.

**Customer Care Cell: 9965 900 990**
Ph: 04324-240663 - K.C.S.R.சிவக்குமார்
E-Mail: kulamurasuoffice@gmail.com


## ஆசிரியர் குரல்

உறவுகள் அனைவருக்கும்
உளமினிக்கும் வணக்கங்கள்!

ஆனியில் மலரும் குலமுரசு இதழை
அச்சாக்கம் செய்து அஞ்சலில் அனுப்பும்
ஆர்வமும் திட்டமும் எமக்கு இருந்தது.
நுண்கிருமி கொரோனாவின் வன்முறை காரணமாக
மின்இதழாக அனுப்புவதைத் தவிர வேறு வழியில்லை!

எல்லாத் தீமைகளுக்குள்ளும் ஒரு நன்மை உண்டு
என்பது தத்துவ வல்லுநர்களின் கருத்து!

கங்கை நீர் தெளிவானது!
காற்று மண்டல மாசு குறைந்தது! - என்றெல்லாம்
கொரோனாவின் மறுபக்கத்தை பட்டியலிடுவார்கள்.

அதுபோல,
குலமுரசை மின்னிதழாக வெளியிட்டதில்
உலகளாவிய அறிமுகத்தைப் பத்திரிகை பெற்றது!

இணையதள மின்னிதழைப் படித்தவர்கள் பற்றிய
கணினிப் பார்வைத் தரவுகள் நமக்கு மகிழ்வூட்டுகின்றன!
(பார்க்க பக்கம் 5)

நாடுகள் பலவற்றில் வாழுகிற நமது
நாலாறு மனை சொந்தங்கள் ஆர்வத்துடன் படித்து
நேசத்தையும் நல்லாதரவையும் வெளிப்படுத்தி வருகின்றனர்.

இவை தவிர, வாட்ஸ்அப், டெலிகிராம், ஃபேஸ்புக் குரூப்களில்
பகிர்ந்ததைப் படித்தவர் எவ்வளவு பேர் எனும் விபரம்
இந்தத் தரவைவிட அதிகமாகவே இருக்கும் என நம்புகிறோம்!

குலமுரசு இதழை வாசித்த
உலகளாவிய உறவுகளுக்கு
மனமினிக்கும் நன்றிகள்!



அன்புடன் உங்கள்
**துரைஅங்குசாமி**

# அருள் என்னும் கவசம்

கி.வா .ஜகந்நாதன்

பிறர் தன்மேல் ஆயுதம் எய்தால் அதனால் ஊறு படாமல் இருப்பதற்குக் கவசம் அணிந்து கொள்வது வழக்கம். கவசமும் ஒருவகை ஆயுதந்தான். பகைவர்கள் எய்கின்ற ஆயுதம் தம்மை வந்து தாக்காமல் இருப்பதற்குப் பாதுகாப்பாக உடம்பெல்லாம் கவசத்தை அணிந்து கொள்வார்கள். தலையின் மேலும் மூடி உண்டு. முகத்துக்கும் மூடி போட்டுக் கொள்வார்கள். யமனுடைய பகை உண்டானால் அவன் ஏவும் ஆயுதங்களினின்றும் நம்மைக் காப்பாற்றிக் கொள்வதற்குரிய கவசமாக உதவுவது முருகப் பெருமானுடைய திருவருள்.

“வேலாயுதம் உடைய கடவுள் எனக்கு ஒரு கவசம் கொடுத்தான், அதற்கு அருள் என்று பெயர். அது இருக்கும்போது எனக்கு யமனிடத்தில் பயம் இல்லை” என்று சொல்கிறார் அருணகிரிநாதர்.




*“என்பால் ஆயுதம் வருமோ யமனோடு பகைக்கினுமே?”*

யமன் ஆயுதங்களை எய்தால் அருளாகிய கவசம் இருக்கிறதென்று சொல்கிறாரே; அந்தக் கவசம் பெற்றவர்களுக்குப் பிற ஆயுதங்களால் ஊறுபாடு நேராது என்பதற்கு ஏதேனும் சாட்சி உண்டா?

**வசிட்டர் கதை**

வசிட்ட முனிவரின் கதை உங்களுக்குத் தெரிந்திருக்கும். கௌசிக மன்னனுக்கு வசிட்டர் ஒரு சமயம் பெரிய விருந்து வைத்தார். காமதேனுவை அழைத்து எல்லோருக்கும் அறுசுவை உண்டி பரிமாறும்படி செய்தார். அந்த அதிசயத்தைக் கௌசிக மன்னன் கண்டான். ‘காட்டில் வாழும் முனிவர்

நம்முடைய படை முழுவதற்கும் இவ்வளவு பெரிய விருந்து வைத்தாரே; இதற்கெல்லாம் காரணமாக இருப்பது அந்தப் பசுமாடு அல்லவா? அது நம்மிடத்தில் இருந்தால் எவ்வளவு சிறப்பு!' என்று நினைத்தான் கௌசிக மன்னன். உடனே வசிட்டரிடம் சென்று, "அந்த மாட்டை எனக்குக் கொடுத்து விடுங்கள்" என்று கேட்டான்.

"அது என்னால் தருவதற்குரியது அன்று" என்று அவர் சொன்னார். கௌசிக மன்னன் அதைக் கேட்கவில்லை. "அப்படியானால் நீயே அதைப் பற்றிக்கொண்டு போ" என்று முனிவர் சொல்லிவிட்டார். மன்னன் ஆட்களை அனுப்பி அதைப்பிடித்து வரச் சொன்னான். படை வீரர்கள் சென்றார்கள். காமதேனு தன்னுடைய உடம்பைச் சிலிர்த்துக்கொண்டவுடன் ஒவ்வொரு மயிர்க் கால் வழியாகவும் ஒவ்வொரு வீரன் குதிக்கப் பலர் திரண்டு கௌசிக மன்னன் அனுப்பிய படை வீரர்களை மாய்த்து விட்டார்கள். இதைக் கண்ட கௌசிக மன்னனுக்கு மட்டும் வசிட்டரிடம் கோபம் வந்துவிட்டது. "இவ்வளவுக்கும் இந்த முனிவன்தானே காரணம்?" என்று சினந்து அவர் மேலே ஆயுதங்களை எய்யத் தொடங்கினான்.

வசிட்டர் தம்முடைய கையில் எந்த ஆயுதத்தையும் எடுக்கவில்லை. தம் தண்டத்தை முன்னால் ஊன்றிக் கண்ணை மூடிக்கொண்டு ஆண்டவனைத் தியானம் செய்தார். கௌசிக மன்னன் விடுத்த ஆயுதங்கள் எல்லாம் அந்த யோக தண்டத்தின் முன்னால் வந்து விழுந்தன. ஆண்டவனுடைய அருளாகிய கவசத்திற்கு முன்பு ஆயுதங்கள் பயன்படாமல் ஒழிந்தன.

இந்த இரண்டாவது அதிசயத்தைக் கௌசிக மன்னன் கண்டான். அப்போது அவனுக்குத் தெளிவு உண்டாயிற்று. எத்தனை செல்வம் வைத்திருந்தாலும், எத்தனை படைவீரர்களைப் பெற்றிருந்தாலும் அவற்றால் சிறிதும் பெருமை இல்லை, தவத்தினாலும் ஆண்டவனுடைய அருள் நலத்தினாலும் கிடைக்கிற பெருமையே பெருமை என்கிற உண்மை புலனாயிற்று. 'இனி நாமும் தவம் செய்து அருளாகிய கவசத்தைப் பெறவேண்டும். இந்த வசிட்டர் திருவாக்கினால் பிரம்ம ரிஷி என்ற பட்டத்தைப் பெறவேண்டும்' என்று உறுதிபூண்டு பல காலம் தவம் செய்தான்; பின்பு வெற்றி பெற்றான். அவனே விசுவாமித்திர முனிவர் ஆனான்.

எந்தப் படையையும் தம் கையில் வைத்திராத முனிபுங்கவருக்கு ஆண்டவனுடைய அருளாகிய கவசம் துணை நின்றது. அதுபோல் யமன் விடுகின்ற ஆயுதங்களினின்றும் பாதுகாத்துக்கொள்ள 'அஞ்சேல்' என நமக்கு முருகப் பெருமானின் அருளாகிய கவசம் உதவும் என்று அருணகிரியார் சொல்கிறார்.





## இணையத்தில் குலமுரசு

## புதிய முயற்சிக்கு வாசகர்களின் வரவேற்பு

| | |
|---|---|
| Pageviews today | 31 |
| Pageviews yesterday | 38 |
| Pageviews last month | 4,732 |
| Pageviews all time history | 6,564 |
| Followers | 0 |

Manage tracking your own pageviews

Pageviews by Countries

| Entry | Pageviews |
|---|---|
| India | 6134 |
| United States | 216 |
| Unknown Region | 153 |
| Indonesia | 16 |
| Germany | 11 |
| United Arab Emirates | 10 |
| Qatar | 6 |
| Japan | 5 |
| Saudi Arabia | 5 |
| Canada | 2 |

கொரோனா ஊரடங்கு காரணமாக கடந்த 3 மாதங்களாக நம் 24 மனை குலமுரசு இதழ் மின்இதழ் வடிவில் வெளியிடப்பட்டு வருகிறது. அந்த வகையில் ஏப்ரல் மாத முதல் மின்இதழை 1832 பேர் படித்திருந்தனர். சென்ற மே மாத இதழை புதிய மைல்கல்லாக 14-06-2020 வரை

**4732 பேர் படித்துள்ளனர்.**

இது தவிர வாட்ஸ்அப் குரூப்களில் PDF வடிவில் பகிர்ந்ததை, படித்தவர் எண்ணிக்கை இதைவிட அதிகமாகவே இருக்கும் என நம்பலாம்.

கோவை 24 மனை
தெலுங்கு செட்டியார்
இலவச மருத்துவ சேவை
மைய வளாகத்தில்

# சுலோசனா மருந்தகம் திறப்புவிழா





கோவை 24 மனை தெலுங்கு செட்டியார் இலவச மருத்துவ சேவை மையம், பட்டேல் ரோடு, ராம்நகர், SNS காம்ப்ளெக்ஸில் 2019 டிசம்பர் முதல் இயங்கி வருவது அனைவரும் அறிந்ததே. அங்கு வரும் நோயாளிகளுக்கு இலவச மருத்துவ ஆலோசனை செய்வதுடன், இலவசமாக மருத்துவ பரிசோதனைகளையும் செய்ய உதவி வருகிறது.

மேலும் அத்துடன் தேவைப்பட்டால் கோவையில் பல்வேறு மருத்துவ துறைகளிலுள்ள நம் இன மருத்துவர்களுக்கும் பரிந்துரை செய்து முடிந்தவரை இலவசமாக அல்லது குறைந்த செலவில் மருத்துவம் பார்க்க இந்த ஆலோசனை மையம் உதவி வருகிறது.













இத்துடன் கனிசமான தள்ளுபடி விலையில் மருந்துகளையும் கொடுத்தால் நோயாளிகளுக்கு மிகவும் உதவியாகவும் வசதியாகவும் இருக்குமென்று கருதி, பல்வேறு நகரங்களில் மருந்தகங்கள் நடத்தி அனுபவமுள்ள நம் கோவை 24 மனை பட்டதாரிகள் சங்கத்தின் மூத்த உறுப்பினரும், சுலோசனா குரூப் கம்பெனிகளின் நிர்வாகஸ்தருமான திருப்பூர் திரு. S. கிருஷ்ணகுமார் (எ) கண்ணன் அவர்களிடம் கோவையைச் சேர்ந்த அனைத்து 24 மனு சங்கங்களும் கேட்டுக்கொண்டதற்கு இணங்கி,
















அவர் சுலோசனா குரூப் நிறுவனங்களின் CEO திரு. கோபாலகிருஷ்ணனிடம் கூறி கொரோனா காலத்திலும் மிகவும் துரிதமாக வேலை செய்து, இன்று (3.6.2020, புதன் கிழமை) சிறப்பாக கணபதி ஹோமத்துடன் மருந்தகத்தின் திறப்பு விழா சிறப்பாக நடைபெற்றது.

இம்மருந்தகம் 18% தள்ளுபடியுடன் அனைத்து மருந்துகளையும் இங்கு வரும் எல்லாருக்கும் கொடுக்க இருப்பது பாராட்டத்தக்கது. காலை 4.30 மணிக்கு ஆரம்பித்த பூஜையில் திரு. கோபால கிருஷ்ணன் தம்பதியருடன் மருத்துவர்களும், மகாஜன சங்க உறுப்பினர்களும், பட்டதாரிகள் சங்க உறுப்பினர்களும் சமூக பொதுநல சங்க அறக்கட்டளை உறுப்பினர்களும் கலந்து கொண்டனர்.

முதல் வியாபாரத்தை SNS காம்ப்ளெக்ஸ் உரிமையாளர் திரு. MPK சீனிவாசன் அவர்களுடன், டாக்டர் ராதாகிருஷ்ணன், திரு.KMR தேவராஜ், திரு. சரவணபவன் மற்றும் Dr.சம்பத் ஆகியோர் ஆரம்பித்து வைத்து சிறப்பித்தனர்.

அதேசமயம் நமது கிளினிக்கும் காலை 9 மணி முதல் 12 மணி வரை செயல்பட்டது.

இந்த விழாவில் கோவை 24 மனை தெலுங்கு செட்டியார் மகாஜன சங்க செயலாளர் Dr. N.செல்வராஜன், கோவை 24 மனை பட்டதாரிகள் சங்க முன்னாள் தலைவர் K.காளிமுத்து, கோவை 24 மனை பட்டதாரிகள் சங்க தலைவர் Dr.பாலமுருகன், Dr.அருண்பிரசாத், Dr. மோகன், திரு.P.R.மணிகண்டன் மற்றும் சுலோசனா குரூப் நிர்வாகிகள், ஊழியர்கள் ஆகியோர் கலந்து கொண்டு விழாவை சிறப்பித்தனர். வந்திருந்த அனைவருக்கும் காப்பி, இனிப்பு பலகாரங்கள் வழங்கப்பட்டன.











**24 மனையாரின் மருத்துவ உதவிக்கு**
**கோவை 24 மனை மருத்துவர்களின்**
**உதவி மொபைல் எண்ணைத் தொடர்பு கொள்க**






**உதவி எண் : 98431 50024**

செயல்படும் நேரம் : காலை 9 மணி முதல் மாலை 8 மணி வரை

1. SMS அல்லது வாட்ஸ்அப் மெசேஜ் கொடுக்கவும். 24 மணி நேரத்தில் பதில் கொடுக்கப்படும்.
2. தயவு செய்து போன் செய்து பேசுவதைத் தவிர்க்கவும். மிகவும் அவசரமான நேரத்தில் மட்டும் போன் செய்து பேசவும்.
3. கோவையிலுள்ள பல்வேறு மருத்துவமனைகளிலுள்ள மருத்துவர்கள் அவர்களுடைய சிறப்புப் பிரிவுகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.
4. தயவு செய்து மருத்துவர்களது வேலைக்குத் தொந்தரவு கொடுக்காமல் அவர்களை அணுகி வேண்டிய ஆலோசனை/உதவியைப் பெறவும்.

## வடுகபட்டி தெய்வத்திரு. K.B.துரைராஜ் அவர்கள் நினைவாக கொரோனா நல உதவிகள் வழங்கப்பட்டன.

வடுகபட்டி முன்னாள் சேர்மன் கே.பி.துரைராஜ் அவர்களின் 30ஆம் நாள் நினைவு அஞ்சலியின் போது அவர் நினைத்தது போல் கொரானா நல உதவிகள் வடுகபட்டி கே.பி.ராஜம்மாள் கல்வி அறக்கட்டளை சார்பில் வழங்கப்பட்டது.





வண்ணாரப்பேட்

# ஸ்ரீ சாந்தி சாரிஸ்

டெக்ஸ்டைல்ஸ் & ரெடிமேட்ஸ்

மொத்த விலைக்கடை






New Collections ! New Style ! New Fashion



New சாந்தி சாரிஸ் வண்ணாரப்பேட்




NO.1 SHOP

ஹோல்சேல் பிரைஸ்ல...
நாங்க மட்டும் சென்னையில...

சூப்பர் ரெடிமேட்ஸ்

No.59, M.C. ரோடு, பழைய வண்ணாரப்பேட்டை, சென்னை - 21.

✆ : 044 - 25900181 | 25901181 | 25902183





# ஆனித் திருமஞ்சனம்

கோயில்’ என்று பொதுவாக வழங்கினாலே சைவத்தில் சிதம்பரம் நடராசப் பெருமானின் கோயிலைத்தான் குறிக்கும். ஊர்ப்பெயர் தில்லை; கோயிலின் பெயர் சிதம்பரம், இன்று ஊர்ப்பெயர் வழக்கில் மறைந்து, கோயிலின் பெயரே ஊர்ப் பெயராக வழங்கி வருகிறது. தில்லை மரங்கள் அடர்ந்த காடாக இருந்தமையால் தில்லைவனம் என்று பெயர் பெற்றது. (இம்மரங்கள் தற்போது சிதம்பரத்தில் இல்லை; ஆனால் இதற்கு அண்மையிலுள்ள பிச்சாவரத்திற்குப் பக்கத்தில் உப்பங்கழியின் கரைகளில் காணப்படுகின்றன.)

மாணிக்கவாசகர் புத்தரை வாதில் வென்று ஊமைப் பெண்ணைப் பேசுவித்த பெரும்பதி. திருஞானசம்பந்தர் தில்லைவாழ் அந்தணர்களைச் சிவகணங்களாகக் கண்டது இப்பதியில் தான். திருநீலகண்ட நாயனார் அவதரித்து வாழ்ந்த பதி.

சிவபெருமானின் அவதாரத் தலமாக விளங்குவது தில்லை (சிதம்பரம்). இங்கு சங்கம வழிபாடு மேற்கொள்ளப்படுகிறது. இதே சிதம்பரம் நகரில் முத்தித் தலமாக விளங்குவது திருப்புல்லீச்சரம் ஆகும். இங்கு குருபூஜை தை - விசாகத்தில் நடைபெறுகிறது.

உமாபதிசிவம் ‘கொடிக்கவி’ பாடிக் கொடியேற வைத்த அதிசயம் நிகழ்ந்ததும், திருப்பல்லாண்டு பாடிச் சேந்தனார் தடைப்பட்ட தேரை ஓடச்செய்ததும், மாமன்னன் இராஜராஜ சோழன் வேண்டுதலின்பேரில் நம்பியாண்டார் நம்பிகளால் பொல்லாப்பிள்ளையாரின் துணைக்கொண்டு, திருமுறைகளை வெளிப்படுத்தியது, சேக்கிழார் பெருமானுக்குத் திருத்தொண்டர் புராணம் பாட அடியெடுத்துத்தந்தது எனப் பல நிகழ்வுகள் நடைபெற்றது இத்திருத்தலத்தில்தான்.

51 ஏக்கர் பரப்பில் அமைந்த பிரம்மாண்டமான சிவத்தலம் இது. மிகச் சிறந்த கட்டிடக்கலைக்கு எடுத்துக்காட்டாக அமைந்த அற்புத தலம். நடராஜரின் பஞ்ச சபைகளில் இது சிற்றம்பலம்.

சிதம்பரம் நடராஜர் கோயிலில் எட்டுத்

திசைகளிலும் சாஸ்தாவின் எட்டு அவதாரங்கள் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளன. அந்த அவதாரங்கள் மகா சாஸ்தா, ஜகன்மோகன சாஸ்தா, பாலசாஸ்தா, கிராத சாஸ்தா, தர்மசாஸ்தா, விஷ்ணு சாஸ்தா, பிரம்ம சாஸ்தா, ருத்ர சாஸ்தா.

இறைவன் இத்தலத்தில், நடராஜர் என்ற உருவமாகவும், ஆகாயம் என்ற அருவமாகவும், ஸ்படிக லிங்கம் என்ற அருவுருமாகவும் அருள்பாலிக்கிறார்.

## மூலவர்

பெரும்பாலான பக்தர்கள், சிதம்பரம் கோயிலின் மூலவர் என்றாலே அது நடராஜர் தான் நினைத்துக் கொண்டிருப்பர். கோயிலுக்குள் நுழைந்ததும், நடராஜர் சன்னதியை தேடியே ஓடுவர். ஆனால், இத்தலத்து மூலவர் லிங்கவடிவில் ஆதிமூலநாதர் என்ற பெயரில் அருள் செய்கிறார். பதஞ்சலி, வியாக்ரபாத முனிவர்கள் கயிலை யில் தாங்கள் கண்ட சிவனின் நாட்டிய தரிசனத்தை, பூலோக மக்களும் கண்டு மகிழ விரும்பினர். எனவே இத்தலத்துக்கு வந்து ஆதிமூலநாதரை வேண்டி தவம் செய்தனர். இவர்களது வேண்டு தலை ஏற்ற சிவன், திரிசகஸ்ர முனீஸ்வரர்கள் என்போரை கயிலை யிலிருந்து, சிதம்பரத்திற்கு அழைத்து வந்து தை மாதம் பூசத்தில் பகல் 12 மணிக்கு நாட்டிய தரிசனம் தந்தார். இந்த திரிசகஸ்ர முனிவர்களே தில்லை மூலவாரயிவர் என்று சொல்வதுண்டு.

ஆதிசங்கரர் பிரதிஷ்டை செய்த ஸ்ரீசக்ரம் அம்மன் சன்னதியில் உள்ளது.

## நடராஜர்

நடராஜர் உருவத்தைச் சிலையாகவோ படமாகவோ நாம் அனைவருமே பார்த்திருக் கோம். ஆனால் சிதம்பரம் நடராஜர் மட்டும் தனிச் சிறப்பு வாய்ந்தவர். அவரை நடராஜராஜர், சபாபதி, சபாநாயகர் என்றெல் லாம் அழைப்பது உண்டு. ஏனெனில் எல்லாக் கோயில் நடராஜர்களை விடச் சிதம்பரம் நடராஜர் தனிச்சிறப்பு வாய்ந்தவர்.

இப்போது நடராஜரின் உருவ அமைப்பைப் பார்ப்போம்.

ஆடும் கோலத்தில் இடது பதத்தை மேலே தூக்கிக் கொண்டு ஆடும் இந்த நடராஜரை வர்ணிக்க வார்த்தைகள் ஏது? நாட்டியத்தின் ஆதி குருவான சிவன் ஆடும் இந்த ஆனந்தத் தாண்டவம் விவரிக்க முடியாத அழகுடனும், அதே சமயம் ஒரு விதமான திகிலுடனும் கூடியதாய்த்



தோன்றுகிறது. இறைவனின் இந்தப் புனிதமான அசைவுகளில் நம் உள் மனதின் பாவங்கள் பொசுங்கிப் போகும். அவன் அபிநயத்திலோ எத்தனை எத்தனை அர்த்தங்கள் பொதிந்ததாய் உள்ளது? ஆறு பாவங்களைக் காட்டுகிறது இந்த நாட்டியக் கோலம்.

நடராஜ ஸ்வரூபங்கள் அநேகம் இருந்தாலும் இந்த ஆனந்தத் தாண்டவ ஸ்வரூபத்தின் விசேஷம் தனி. இது நமக்கு சிருஷ்டியின் தத்துவத்தை உணர்த்துகிறது. நடராஜர் தெற்கே பார்த்துக் கொண்டும் இருப்பார். இவரின் வடிவே ஓம் என்னும் ஓங்கார வடிவானது. ஓங்கார வடிவினுள் உள்ள பஞ்சாட்சர மூர்த்தியான இவரின் இந்தத் தரிசனம் நமக்கு என்ன உணர்த்துகிறது என்றால் முயலகன் போன்ற அசுர மனம் நமக்கு. அது பாம்புகள் போல் சீறிக் கொண்டு மேலெழும்பும். அந்த மனத்தை அடக்க வேண்டும். தியானம் என்ற நெருப்பில் சுட்டுப் பொசுக்கிக் கடைசியில் இறைவனை அடைய வேண்டும்.

சிவன் அபிஷேகப்பிரியன் என்பது ஊரறிந்த விஷயம். அதிலும் நடராஜருக்கு அபிஷேகம் என்பது ஆனந்தத் தாண்டவம்தான். சிதம்பரம் நடராஜர் கோயிலில் ஆனித் திருமஞ்சனம் மிகப் பிரசித்தி. அதே நாளில் அனேக சிவன் கோயில் களில் நடராஜருக்கு அபிஷேக ஆராதனைகள் நடைபெறும். ஆனி மாதம் உத்திர நட்சத்திரத்தில் ராஜ சபை யில் அதிகாலையில் இந்த விசேஷ அபிஷேகம் நடைபெறும்.

### நடனங்கள்

ஆனந்தத் தாண்டவம், சந்தியா தாண்டவம், கௌரி தாண்டவம், திரிபுர தாண்டவம், காளி தாண்டவம், முனி தாண்டவம், சங்கரா தாண்டவம் என ஏழு தாண்டவங்கள் உள்ளன என்று சிவபெருமான் பார்வதிக்குக் கூறியதாகத் தெரி விக்கின்றன. திருப்புத்தூர் புராணச் செய்திகள். இத்திருக்கோயிலில் சிவன் ஆனந்தத் தாண்டவம் ஆடும் நடராஜனாக அருள்பாலிக்கிறார்.



★ நாக்கால் காதை சுத்தம் செய்யும் விலங்கு - ஒட்டகச்சிவிங்கி

★ நான்கு மூக்குகளை உடைய உயிரினம் - நத்தை

★ நீல நிறத்தை பார்க்கும் சக்தியுடைய ஒரே பறவை - ஆந்தை

★ வயிற்றில் நான்கு பகுதிகளைக் கொண்ட விலங்கு - மாடு

★ நீரை அருந்தாத நீர்வாழ் உயிரினம் - டால்பின்

★ நுரையீரல் இல்லாத உயிரினம் - எறும்பு



## தெரிந்து கொள்ளுங்கள்...

# கனிகளில் சிற்பம் கலைப்படைப்பில் புதுமை

## இனச் சாதனையாளர் இளஞ்செழியன்



24 மனை இனத்தில் பிறந்து உலகநாடுகளை தன் கலை திறமையால் திரும்பிபார்க்க வைத்த சாதனையாளர் மு.இளஞ்செழியன்.

காய்கறிகளைக் கையால் வெட்டி சமையலுக்குப் பயன்படுத்தவே படாதபாடு படுகிறபோது வாயில் கத்தியைக் கவ்வி காய் கனிகளில் சிற்பம் செதுக்கி சாதனையின் சிகரம் தொட்ட இளைஞர் இளஞ்செழியன் தேனி மாவட்டம் கூடலூரைச் சேர்ந்தவர்.




தேனி மாவட்டத்தில் பசுமைவாய்ந்த கூடலூர் என்ற சிறிய ஊரில் பிறந்து மாநிலம் கடந்து, நாடுகள் கடந்து கடல்கடந்து இவரின் புகழ் சீனா, தைவான், மலேசியா, சிங்கப்பூர், அமெரிக்கா, ஜெர்மனி, ஜப்பான் என உலக நாடுகளில் பரவி வருவது இவருக்கு மட்டுமல்ல நம் 24 மனையார் அனைவருக்கும் பெருமை.

தர்ப்பூசணி பழங்களில் தலைவர்களின் உருவங்களை வடிக்கும் தனித்திறமை - பெற்றிருக்கிறார், தேனி கூடலூர் இளைஞர் இளஞ்செழியன். சமீபத்தில், அமெரிக்க ஜனாதிபதி டொனால்டுடிரம்பின் இந்திய வருகையின்போதும், சீன அதிபர் ஜின்பிங் மாமல்லபுரம் வருகையின்போதும் அவர்களது உருவத்தை தர்ப்பூசணியில் செதுக்கியது, பலரையும் கவர்ந்தது.




முன்னாள் முதல்வர் எம்.ஜி.ஆரின் நூற்றாண்டு விழா, அரசு விழாவாக திருவண்ணாமலையில் நடைபெற்றது. அப்போது நூறு தர்ப்பூசணிகளில் எம்.ஜி.ஆரின் நூறுவித தோற்றங்களை உருவாக்கி காட்சிக்கு வைத்ததற்காக, முதல்அமைச்சர் மாண்புமிகு எடப்பாடி பழனிசாமி அவர்கள் கையால் பாராட்டுச்சான்றிதழ் பெற்றார்.

சமீபத்தில் சென்னை சூப்பர் கிங்ஸ் அணி கேப்டன் டோனியின் உருவத்தை தர்ப்பூசணியில் வடித்துள்ளார். அதைப் பற்றி அறிந்த ஸ்டார் தொலைக்காட்சி நிறுவனத்தினர், அவரை அழைத்து, டோனி உருவத்தை உருவாக்குவதைப் பதிவு செய்தனர். வருகிற ஐ.பி.எல். சீசனின் போது அது ஒளிபரப்பாகும்.

சென்னையில் நடைபெற்ற காவல்துறை நிகழ்ச்சியில், 'காவலன்' செயலி பற்றி பிரபலப்படுத்தும் வகையில் அதன் 'லோகோ'வை வடித்து காட்சிக்கு வைத்திருந்தார். அதை காவல் உயரதிகாரிகள் பெரிதும் பாராட்டினர். இதுபோன்ற





தலைமைச் சங்க 10வது மாநில மாநாட்டில் சாதனையாளர் விருதை இனப்பாதுகாவலர் திரு. K.C.P. அவர்களிடமிருந்து பெற்றுள்ளார்.

விழிப்புணர்வு விஷயங்கள், சமூக நலன் சார்ந்த கருத்துகளை தர்ப்பூசணியில் செதுக்கி வைத்து வருகிறார்.

2017-ம் ஆண்டு, தேனி மாவட்ட கலெக்டரால் 'கலை வளர்மணி' பட்டம் இவருக்கு வழங்கப்பட்டது. இக்கலையால்தான் உள்நாட்டில் மட்டுமின்றி சர்வதேச அளவிலும் நண்பர்களையும் நலம் விரும்பிகளையும் பெற்றிருக்கிறார். மும்பையில் உள்ள ஷெல் சமையல் கலை கல்லூரியில், வருகைதரு பேராசிரியராக இக்கலையை மாணவர்களுக்கு கற்றுத் தரும் வாய்ப்பும் இவருக்குக் கிட்டியிருக்கிறது.

கவிப்பேரரசு வைரமுத்து அவர்களை வடித்த சிற்பத்தைப் பார்த்து திரு. வைரமுத்து அவர்கள் பெரிதும் பாராட்டியுள்ளார்.

### வெளிநாட்டு அனுபவங்கள்

இவர் வெளிநாட்டு 'வெஜிடபிள் கார்விங்' நிகழ்ச்சிகளில் ஒரு போட்டியாளராக அன்றி, நடுவராகவும் பங்கேற்கும் கவுரவத்தைப் பெற்றிருக்கிறார். அப்படி கடந்த 2015-ம் ஆண்டு தைவான் தலைநகர் தைபேயில் நடைபெற்ற சர்வதேச காய்கறிக் கலை கண்காட்சியில் பங்கேற்றார். அப்போது, வாயால் கத்தியைப் பற்றி, காய், கனிகளில் சிற்பங்களைச் செதுக்கியது பல நாட்டினரையும் ஆச்சரியத்தில் ஆழ்த்தியது.

இக்கலையால், கலாம் குடும்பத்தினரின் அன்பைப் பெற்றிருக்கிறார். அவர்களின் அழைப்பின் பேரில், கடந்த 2019 அக்டோபர் 15-ம் தேதி டெல்லி ஜனாதிபதி மாளிகையில் நடந்த கலாம் பிறந்தநாள் விழாவில் பங்கேற்கும் அரிய வாய்ப்பையும் பெற்றார்.














மணல் சிற்பக் கலைக்கு ஒரு மரியாதையை ஏற்படுத்திக்கொடுத்து தானும் மதிப்புப் பெற்ற ஒடிசாவின் சுதர்சன் பட்நாயக் போல காய்கறிக் கலைக்கு மகத்துவம் சேர்த்து புதிய உயரங்களைத் தொட உழைக்கிறார், இளஞ்செழியன். அதில் அவர் வெற்றி பெறுவார் என நம்பலாம்.

தினத்தந்தி இளைஞர் மலர் இவருக்கென பிரத்யேகமான ஒரு கட்டுரை வெளியிட்டு இவரது சிற்பக்கலை ஆற்றலைப் பாராட்டியிருக்கிறது.




■ தேனி மாவட்டம் கூடலூரைச் சேர்ந்த இளஞ்செழியன், தர்பூசணி பழங்களில், 14 நாட்டு மொழிகளில் கொரோனா விழிப்புணர்வு வாசகங்களை செதுக்கியுள்ளார்.

## 14 மொழிகளில் விழிப்புணர்வு தர்பூசணியில் செதுக்கிய இளைஞர்

**கூடலூர், மே 3–**

கூடலூரை சேர்ந்த இளைஞர், தர்பூசணியில் 14 நாட்டு மொழிகளில் கொரோனா விழிப்புணர்வு வாசகத்தை செதுக்கியுள்ளார்.

தேனி மாவட்டம், கூடலூரைச் சேர்ந்தவர், இளஞ்செழியன், 33. இவர், ஸ்பெயின், இத்தாலி, சீனா, அரேபியா உட்பட 14 நாட்டு மொழிகள், தமிழ், தெலுங்கு, கன்னடம், மராத்தி, மலையாளம், ஹிந்தி உள்ளிட்ட ஒன்பது இந்திய மொழிகளில், தர்பூசணி பழங்களில், விழிப்புணர்வு வாசகங்களை செதுக்கி அசத்தியுள்ளார்.

அவர் கூறியதாவது:

உலகத்தை மிரட்டும் கொரோனாவை ஒழிக்க, மக்கள் அனைவரும் ஒருங்கிணைந்து செயல்பட வேண்டியுள்ளது. மொழி, இனம், மதத்தால் வேறுபட்டிருந்தாலும், ஒருமித்த கருத்தோடு, இந்நோயை விரட்ட முயற்சித்தால் மட்டுமே, இதிலிருந்து விடுபட முடியும். இதை உணர்த்த, இணையத்தில் தேடி எடுத்து, நண்பர்கள் உதவியுடன், உலக மொழிகளில், விழிப்புணர்வு வாசகங்களை தர்ப்பூசணியில் செதுக்கி உள்ளேன்.

இவ்வாறு, அவர் கூறினார்.

இவரது தந்தை சிமெண்ட் தொட்டிகடை நடத்தி வருகிறார். தாயார் சரஸ்வதி இல்லத்தரசி. மனைவி சாகானாதேவி. உடன்பிறந்தவர் தங்கை மட்டும். அவருக்குத் திருமணமாகி விட்டது.

இவரது சாதனையை அரசியல் பிரமுகர்கள், இனப்பெருமக்கள், தொலைக்காட்சி ஊடகங்கள், முகநூல், யுடியூப் போன்ற சமூக வலைத்தளங்கள் எனப் பல்வேறு துறையினர் பாராட்டுத் தெரிவித்துள்ளனர்.

பல்வேறு நிறுவனங்கள் வேலைவாய்ப்பளிக்க முன்வந்தபோதும், அவற்றைத் தவிர்த்துவிட்டுத் தனது சொந்த முயற்சியால் யாழ் இன்ஸ்டிட்யூட் ஆப் கார்விங் என்ற பயிற்சி நிறுவனத்தை தொடங்கியுள்ளார். இக்கலையின்பால் ஆர்வம் கொண்ட பலரும் தேனி நகருக்கு வந்து கற்றுச் செல்கின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது.

நம் இனத்தைச் சேர்ந்த இளைஞரின் இச்சாதனைகளை குலமுரசு ஊக்குவித்துப் பாராட்டுகிறது.





கோவிட்-19 நிவாரண பொருட்களை மாண்புமிகு அமைச்சர் உடுமலை கே.இராதாகிருஷ்ணன் வழங்கினார்.

திருப்பூர் மாவட்டம் வெள்ளகோவில் ஒன்றியத்தில் எல்.என்.பட்டி, கம்பளிபட்டி, சேர்வை காரன்பாளையம், தாசநாயக்கன்பட்டி, உத்தம பாளையம், நாதநாயக்கம்பட்டி, முருகம்பாளையம் உள்ளிட்ட பகுதிகளில் உள்ள பொதுமக்களுக்கு கோவிட்-19 நிவாரண பொருட்கள் மாண்புமிகு அமைச்சர் அரசு கேபிள் டிவி நிறுவன தலைவர் உடுமலை கே.இராதாகிருஷ்ணன் அவர்கள் நேரடியாக வழங்கினார்.

திருப்பூர் மாவட்டம் உடுமலை சட்டமன்றத் தொகுதி பெரியகோட்டை ஊராட்சி அலுவலகத்தில் நலத்திட்ட உதவிகள் வழங்கும் விழா மாண்புமிகு அமைச்சர் அரசு கேபிள் டிவி நிறுவன தலைவர் உடுமலை கே,ராதாகிருஷ்ணன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது நிகழ்ச்சியில் பெரிய கோட்டை ஊராட்சி சின்னவீரம்பட்டி ஊராட்சி குறிஞ்சேரி ஊராட்சி ஆகிய பகுதிகளில் உள்ள மகளிர் சுய உதவி குழுக்கள் 30 பெண்களுக்கு 12 லட்சம் கடனுதவியும் முதியோர் ஆதரவற்றோர் விதவைகள் உள்ளிட்ட 20 நபர்களுக்கு உதவித்தொகை மற்றும் வீடில்லாத 10 நபர்களுக்கு வீட்டுமனை பட்டாக்களையும் அமைச்சர் அவர்கள் வழங்கினார்.





கோவை மாவட்டம் உடுமலை சட்டமன்றத் தொகுதிக்குட்பட்ட பொள்ளாச்சி தெற்கு ஒன்றியம் ஜமீன் கோட்டாம்பட்டி ஊராட்சியில் நபார்டு திட்டத்தின் கீழ் சாலை பணிகளுக்கான பூமி பூஜையில் மாண்புமிகு அமைச்சர் அரசு கேபிள் டிவி நிறுவன தலைவர் உடுமலை கே ராதாகிருஷ்ணன் அவர்கள் கலந்துகொண்டு பணியை துவக்கி வைத்தார். பின் கோவிட்-19 நிவாரணமாக அமைச்சர் அவர்கள் தனது சொந்த செலவில் அரிசி உள்ளிட்ட பொருட்களை நேரடியாக ஒவ்வொருக்கும் வழங்கினார் பொள்ளாச்சி சப்-கலெக்டர் வைத்தியநாதன் தாசில்தார் ஜமீன் கோட்டாம்பட்டி ஊராட்சி மன்ற தலைவர், ஒன்றியக்குழு தலைவர் வட்டார வளர்ச்சி அலுவலர்கள் பொறியாளர்கள் ஒன்றியக்குழு உறுப்பினர்கள் உள்ளிட்டோர் கலந்து கொண்டனர்.



# மக்கள் சேவையே மகேசன் சேவை



## சுவாமி விவேகானந்தர் நினைவு தினம் - ஜுலை 4

பத்தொன்பதாம் நூற்றாண்டின்இந்தியாவின் தலைசிறந்த சமயத் தலைவர்களுள் ஒருவர் விவேகானந்தர். இவரது இயற்பெயர் நரேந்திரநாத் தத்தா(Narendranath Dutta).

இராமகிருஷ்ண பரமஹம்சரின் சீடரான இவரின் கருத்துகள் இளைஞர்களை எழுச்சியடையச் செய்வதாக அமைந்தது. இந்தியாவிலும் மேலைநாடுகளிலும் அத்வைதவேதாந்த தத்துவங்களை அடிப்படையாகக் கொண்ட பல சொற்பொழிவுகளை ஆற்றியுள்ளார்.

1893 ஆம் ஆண்டு அவர் சிகாகோவில் உலகச் சமயங்களின் பாராளுமன்றத்தில் நிகழ்த்திய சொற்பொழிவுகள் உலகப்புகழ் பெற்றது.

### பிறப்பும் இளமையும்

விவேகானந்தர் 1863 ஜனவரி 12ம் நாள் கல்கத்தாவில் விசுவநாத் தத்தாவுக்கும் புவனேஸ்வரி தேவிக்கும் முதல் மகனாகப் பிறந்தார். தாய் மொழி வங்காளம். சிறு வயதிலேயே மிகுந்த நினைவாற்றல் கொண்டவராகவும் சிறந்த விளையாட்டு வீரராகவும் திகழ்ந்தார். இசையும், இசை வாத்தியங்களும் பயின்றார். இள வயது முதலே தியானம் பழகினார். பகுத்தறிவாளராகவும் திகழ்ந்தார்.

பள்ளிப்படிப்பு முடிந்தவுடன் 1879ம் ஆண்டு கல்கத்தாவில் உள்ள மாநிலக் கல்லூரியில் (Presidency College) சேர்ந்தார். பின்னர் ஸ்காட்டிஷ் சர்ச் கல்லூரியில் (Scottish Church College) தத்துவம் பயின்றார். அங்கே மேல்நாட்டு தத்துவங்கள், மற்றும் ஐரோப்பிய நாடுகளின் வரலாறு முதலிய வற்றை படித்தறிந்தார். இச்சமயத்தில் அவர் மனதில் இறை உண்மைகளைப் பற்றி பல கேள்விகளும் சந்தேகங்களும் எழுந்தன.

இறைவனைப் பலர் வழிபடுவதும், உலகின் வேறுபாடுகளும் ஏற்றத்தாழ்வுகளும் நிறைந்துள்ளதும் அவருக்கு முரண்பாடாக தோன்றியது. இது பற்றி பல பெரியோர்களிடம் விவாதித்தார்; மேலும், அக்காலகட்டத்தில் பிரபலமாயிருந்த பிரம்ம சமாஜத்தில் உறுப்பினரானார். ஆனால் இம்முயற்சி கள் யாவும் அவர் கேள்விகளுக்கு தகுந்த விடையளிக்க முடியவில்லை.

## ராமகிருஷ்ணருடன்

இறை உண்மைகளைப் பற்றி அறிந்து கொள்வதற்காக, இராமகிருஷ்ணரைப் பற்றி கேள்விப்பட்டு அவரிடம் சென்றார் விவேகானந்தர். ராமகிருஷ்ணரை முதன் முதலாக 1881ம் ஆண்டு விவேகானந்தர் சந்தித்தார். எதையும் பகுத்தறிந்து ஏற்றுக் கொள்ளும் விவேகானந்தரால் முதலில் ராமகிருஷ்ணரின் இறைவனைப் பற்றிய கருத்துக்களை முழுமையாக ஏற்றுக்கொள்ள முடியவில்லை.



இறைவழிபாட்டையும் உடனடியாக ஏற்றுக் கொள்ளவில்லை. இராமகிருஷ்ணரின் போதனைகள், உருவ வழிபாடு, அல்லது அருவ வழிபாடு என்று ஒரே தனி வழியினை போதிக்காமல், இரண்டு வழிகளிலும் இருக்கும் உண்மையை உணர்த்துவதாக இருந்தன. இராமகிருஷ்ணரின் ஈடுபாட்டால், விவேகானந்தரால், பக்தி மார்க்கம், மற்றும் ஞான மார்க்கம், இரண்டின் அவசியத்தினையும் புரிந்து கொள்ள முடிந்தது.

## துறவறம்

1886-ம் ஆண்டு ராமகிருஷ்ணர் இறந்த பின் விவேகானந்தரும் ராமகிருஷ்ணரின் மற்ற முதன்மை சீடர்களும் துறவிகளாயினர். பின்னர் நான்கு ஆண்டுகள் இந்தியத் துணைக்கண்டம் முழுவதும் சுற்றினார் விவேகானந்தர். தன்னுடைய இந்த பயணங்கள் மூலம் இந்தியாவிலுள்ள அனைத்து பகுதிகளின் கலாச் சாரம், பண்பாடு, வாழ்க்கை நிலை போன்றவற்றை அனுபவித்து அறிந்தார் விவேகானந்தர்.

அச்சமயத்தில் இந்திய மக்களின் வாழ்க்கை நிலை மிகவும் கீழானதாக இருந்தது. மேலும், அது இந்தியர் ஆங்கிலேயரிடம் அடிமைப்பட்டிருந்த காலமாகும்.

தன் பயண முடிவில் 24 டிசம்பர் 1892-ல் கன்னியாகுமரி சென்ற விவேகானந்தர் அங்கே கடல் நடுவில் அமைந்த ஒரு பாறை மீது மூன்று நாட்கள் தியானம் செய்தார்.

அந்த மூன்று நாட்கள் இந்தியாவின் கடந்த காலம், நிகழ்காலம், மற்றும் எதிர்காலம் குறித்து தியானம் செய்ததாக பின்னர் அவர் குறிப்பிட்டுள்ளார். இன்றும் அந்தப் பாறை விவேகானந்தர் நினைவிடமாக பராமரிக்கப் பட்டு வருகிறது.

## மேலைநாடுகளில்

கன்னியாகுமரியில் இருந்து சென்னை வந்த விவேகானந்தரிடம், அமெரிக்காவின் 1893-ம் ஆண்டு உலக சமய மாநாட்டில் இந்து மதம் சார்பாக கலந்து கொள்ளுமாறு சென்னை நகர இளைஞர்கள் வேண்டுகோள் விடுத்தனர்.

அதை ஏற்றுக்கொண்ட விவேகானந்தர் அமெரிக்கா பயணமானார். சிகாகோவின் உலகச் சமய மாநாட்டில் அவர் ஆற்றிய சொற்பொழிவுகளுக்கு அந்நாட்டில் பெரும் வரவேற்பு கிடைத்தது.



மேலும் சில ஆண்டுகள் மேலைநாடுகளில் தங்கி பல சொற்பொழிவுகள் ஆற்றி வேதாந்த கருத்துக்களை அவர்களிடம் அறிமுகப் படுத்தினார். நியூயார்க், மற்றும் லண்டன் நகரங்களில் வேதாந்த மையங்களை நிறுவினார்.

## இந்தியா திரும்புதல்

1897 ஆம் ஆண்டு இந்தியா திரும்பியவுடன் கொழும்பு முதல் கல்கத்தா வரை அவர் ஆற்றிய பேச்சுக்கள், அப்போது கீழ்நிலையில் இருந்த இந்தியரை விழிப்புறச் செய்வதாகவும், இளைஞர்கள் தம்முள் இருந்த ஆற்றல்களை உணரும்படிச் செய்வதாகவும் அமைந்ததாக கருதப்படுகிறது.

பின்னர் கல்கத்தாவில் இராமகிருஷ்ண மிஷன் மற்றும் மடத்தை நிறுவினார் விவேகானந்தர்.

ஜனவரி 1899 முதல் டிசம்பர் 1900 வரை இரண்டாம் முறையாக மேல்நாட்டு பயணம் மேற்கொண்டார்.

## மறைவு

1902-ம் ஆண்டு ஜூலை 4-ம் நாள், தனது 39-ம் வயதில் பேலூரில் விவேகானந்தர் காலமானார். இன்று அவர் நிறுவிய ராமகிருஷ்ண மிஷன் மற்றும் மடம் உலகம் முழுவதும் கிளைகள் பரவி செயல்பட்டு வருகிறது.

## விவேகானந்தரின் கருத்துகள்

மனிதர் இயல்பில் தெய்வீகமானவர்கள் என்பதையும், இந்த தெய்வீகத்தை



வெளிப்படுத்தவதே மனித வாழ்வின் சாரம் என்பதையும் அவர் தன் அனைத்து சொற்பொழிவுகளிலும், எழுத்துகளிலும் வலியுறுத்துவதைக் காணலாம்.

காடுகளிலும், மலைகளிலும் வசிக்கும் ரிஷிகளிடமும், சமூகத்தில் ஒரு பிரிவினரிடமும் மட்டுமே குழுமியிருந்த ஆன்மீகம், சமூகத்தில் இருந்த அனைவரிடமும் பரவ வேண்டும் என அவர் விரும்பினார். வேதாந்த கருத்துகளை பின்பற்றி செயலாற்றும் ஒருவர், சமூகத்தில் எந்தப் பணியைச் செய்தாலும் அதை சிறப்பாக செய்யமுடியும் என்பது அவர் கருத்து.

மக்கள் சேவையே மகேசன் சேவை என்ற கொள்கையின் அடிப்படையிலேயே அவர் ராமகிருஷ்ண மடத்தை நிறுவினார்.

## பிரபலமான புல்வெளிகள்

- ★ காம்பாஸ் புல்வெளிகள் — பிரேசில்
- ★ லானாஸ் புல்வெளிகள் — கினியா
- ★ சவானா புல்வெளிகள் — ஆப்பிரிக்கா, ஆஸ்திரேலியா
- ★ ஸ்டெப்பி புல்வெளிகள் — யுரேசியா
- ★ பிரெய்ரி புல்வெளிகள் — வட அமெரிக்கா
- ★ பாம்பாஸ் புல்வெளிகள் — அர்ஜென்டைனா
- ★ டவுன்ஸ் புல்வெளிகள் — ஆஸ்திரேலியா



Gujan's PARIPALANA RETIREMENT COMMUNITY

GUJAN'S

# PARIPALANA - PHASE II

**Retirement Community**

Sri Veeramathi Amman INFRA DEVELOPER PVT. LTD.

## Comfortable Homes for Retired living Near Vadavalli.

**First Phase of 92 Units already functioning smoothly Since July 2017.**
**Second Phase of 1, 2, 3 BHK Flats under Construction near**
**Bharathiya Vidhya Bhavan School , Ajanoor Road, Vadavalli, Coimbatore.**




## * Bring back the Memories of Time gone by...

**Common Vegetarian Dining, Cultural & Religious Activities including Regular Music Concerts , Comprehensive Medical Care, Indoor Game Activities, Mini Gym for Seniors, Guest Rooms & Library.**

*** SERVICE PROVIDER- PARIPALANA CAFE**

For Booking Call :

87540 44116
87540 44881
81100 42393



**No : 4, Gandhi Layout,**
**Maruthamalai Main Road,**
**Coimbatore - 46.**



**svaconstructions@yahoo.co.in**
**srigujanbuilder@gmail.com**



**www.gujanparipalanaseniorliving.com**

**TN/11/BUILDING/0045/2019**
**Dated on 29.03.2019**



# திருவிளையாடல்

# மகாப்பெரியவரின் மகத்தான கருணை



இன்ஜினியர் பட்டம் பெற்ற ஒருவருக்கு எந்த காரணமும் இல்லாமல் திடீரென கண் பார்வை போய்விட்டது. எத்தனையோ வைத்தியங்கள் செய்தாகிவிட்டது. பலன்தான் இல்லை.

அச்சமயம் பெரியவா சென்னைக்கு விஜயம் செய்திருந்தார்கள். பொறியாளர் தக்க துணையுடன் தவறாமல் சுவாமிகளைத் தரிசித்து வந்தார். நம்மால் தானே பெரியவாளைப் பார்க்க முடியாது. பெரியவாளின் அருட்பார்வை நம் மீது பட்டாலே பார்வை வந்து விடாதா என்ற அவா.

இப்படியே மாதங்கள் சென்றது. பொறியாள ருடன் வருபவர்கள், சுவாமி தாங்கள் தான் அருள்புரிய வேண்டும் என்று பிரார்த்திப்பார்கள். பெரியவாளிடம் மௌனமே பதிலாகக் கிடைத்தது.

எல்லோருக்கும் கருணைப் பொழியும் வள்ளல் இவர் விஷயத்தில் மௌனம் காப்பது ஏனோ? எதற்குமே வேளை கூடி வர வேண்டுமோ?

தன் அருள்புரியலை நடத்த மனம் வைத்தார், பெரியவா, நேரிடையாக இல்லாமல் மறைமுகமாக.

தேவாரம் பாடும் ஓதுவார் அன்று பெரிவாளை தரிசனம் செய்தார். அப்போது பொறியாளரும் சுவாமி பக்கத்தில் தான் இருந்தார்.

சுவாமிகள், தேவார மூர்த்திகள் நால்வரில் ஒருவரான "சுந்தரமூர்த்தி சுவாமிக்கு பார்வை பறிபோனது எப்படி?" என்றார்கள் ஓதுவாரிடம்.

"இறைவனுக்கு கொடுத்த சொல்லைக் காக்க முடியாமல் போனதால், கண் பறிபோனது" என்றார் ஓதுவார்.

"பிறகு சுந்தரமூர்த்தி சுவாமி செய்தது என்ன?"

"திருமுல்லை வாயில் சென்று மெய்த்திருவடி அடைந்தேன் என்று பாடினார். பின் திருவெண்பாக்கம் சென்று பாடினார். அங்குதான் பெருமான் மனம் இரங்கி கைத்தட்டி கொடுத்தார்"

"ம். பிறகு?" சுவாமிகள்.

காஞ்சிபுரம் சென்று ஏகம்பரநாதனைப் பாடினார். இடது கண் பார்வை மட்டும் கிடைக்கப் பெற்றார். திருவாரூர் சென்று புற்றிடங் கொண்டானை வழிபட்டு பதிகம் பாடினார். ஈசன் மனமிறங்கி வலது கண்ணிற்கும் பார்வை கொடுத்தார்."

தொகுப்பு: டாக்டர் துரைஅங்குசாமி



"ஈசன் மனம் வைத்தால் பார்வை கிடைக்கும் என்பது சத்தியம்தானே."

"ஆம் சுவாமி" என்றார் ஓதுவார்.

பொறியாளரிடம் "எல்லாம் கேட்டாய் தானே சுந்தரமூர்த்தி சுவாமி பதிகம் பாடிய தலங்களுக்கு எல்லாம் சென்று நீயும் வழிபடு. உன்னுடன் ஓதுவாரையும் அழைத்துப் போ. தலங்களுக்கு உரிய பதிகத்தை ஓதுவார் பாடுவார்."

"முதலில் கைத்தடி கொடுத்த தலமாகிய புரசைவாக்கம் சென்று கங்காதரேஸ்வரரை வழிபாடு செய். ஈசன் அருளால் உனக்குப் பார்வை மீண்டும் கிடைக்கும்" என்று அருள்வாக்கு கூறினார்கள் சுவாமி.

பெரியவாளின் உத்தரவுபடியே புனிதப் பயணம் மேற்கொண்டார் பொறியாளர். இரு தெய்வங்களின் அருளினாலும் மீண்டும் பார்வை பெற்று மகா பெரியவரின் புனிதத் திருமேனியையும், திருக்கோயில்களையும் தரிசித்து எழில் நிறைந்த உலகத்தை பார்த்து, ரசித்து, மகிழ்ந்து நிறைவோடு தன் வாழ்நாளைக் கழித்தார்.

கருணை மழை தொடரும்...

கோலார்பட்டி குக்கிராமம்தன்னில்
நாலாறுமனை மக்கடையராய் பிறந்து
தாய்அம்மா திராவிட இயக்கத்தில்
தூய்மைவழுவாத் தொண்டாற்றி

பூஞ்சிரிப்பு மாறாமல்
பொதுவாழ்வில் நடைபோடும்
கால்நடைத்துறை அமைச்சர்
கனிந்த மனம் கொண்டவர்!

வான்மழையாய் உதவிகளை
வழங்குகின்ற வள்ளல்மனம்
வேர்வைசிந்தும் பேருழைப்பு
வேர்ப்பலா அணுகுமுறை - இத்தகைய

ஆகாய வெற்றிக்கு வழிவகுத்த
ஆளுமைக் காரணங்கள் ஆயிரம் உண்டு
ஆனாலும் ஆணிவேர்க் காரணம் ஒன்றுண்டு!

மனைவிளக்காய்இவர் கரம்பற்றிய
மகத்தான குணம்கொண்ட பண்பரசி -
மகராசி **பிருந்தா**வின் கைராசிதான்
மங்கலங்கள் விளைவித்த மூலவித்து!

இவர்களின்
கண்ணுக்குக்குக்கண்ணான கண்மணி
கனியமுதச் செல்வமகள் **ஜெயபிரனிதா**
காவியச்செல்வன் **ஆதித்யன்**
கரம்பற்றும் கன்னல் மணவிழா

இல்லத்தருகே அமைந்திட்ட
எளிமையான சிற்றரங்கில்
இல்லறத்தில் இணையும்
இருமனச் சங்கமிப்பை

சொல்லாண்டு வருகின்ற
சுந்தரத் தமிழெடுத்து
பல்லாண்டு வாழ்கவென
பூத்தூவி வாழ்த்துகிறோம்!



கால்நடை பராமரிப்புத் துறை அமைச்சர்
கேபிள்டிவி வாரியத் தலைவர்
மாண்புமிகு
**உடுமலை K.ராதாகிருஷ்ணன்**
திருமதி. **R.கிருஷ்ண பிருந்தா**
அவர்களின் அன்பு மகள்
செல்வி **R.ஜெயபிரனிதா**
செல்வன் **V.ஆதித்யன் விஜயகுமார்**
ஆகியோருக்கு 11-06-2020 அன்று
நிகழ்ந்த திருமண விழாவிற்கு

# வாழ்த்துப் பூ

**முனைவர் துரை அங்குசாமி**
ஆசிரியர், 24 மனை குலமுரசு



# தொழில் தொடங்க ஆர்வமுள்ள இளைஞர்களுக்கு தமிழ்நாடு அரசு தொழில் வணிகத் துறை மாவட்டத் தொழில் மையம் (TIIC) மூலம் பயன்பெற உதவும் அரசின் திட்டங்கள்

## படித்த வேலைவாய்ப்பற்ற இளைஞர்களுக்கான வேலைவாய்ப்பு உருவாக்கும் முகாம் (UYEGP)

**தகுதிகள்**

1) வயது வரம்பு :

   இத்திட்டத்தின் கீழ் விண்ணப்பித்து பயன்பெற 18 வயது முடிந்தவராக இருக்க வேண்டும். பொது பிரிவை சார்ந்தவராக இருப்பின் 35 வயதிற்கு மிகாதவராகவும், சிறப்பு பிரிவை (SC/BC/MBC) சார்ந்தவராக இருப்பின் 45 வயதிற்கு மிகாதவராகவும் இருக்க வேண்டும்.

2) கல்வித் தகுதி 8-ஆம் வகுப்பு தேர்ச்சி பெற்றிருக்க வேண்டும்

3) குடும்ப ஆண்டு வருமானம் ரூ.5,00,000 -ற்கு மிகாமல் இருத்தல் அவசியம்

4) விண்ணப்பதாரர் அவர் தம் விண்ணப்பிக்கும் பகுதியில் குறைந்தபட்சம் மூன்று ஆண்டுகளுக்கு மேல் வசித்து வருபவராக இருத்தல் வேண்டும்.

5) வியாபாரம் சார்ந்த தொழில்களுக்கு அதிக பட்சமாக ரூ. 5.00 இலட்சமும், சேவை சார்ந்த தொழில்களுக்கு அதிகபட்சமாக ரூ. 5.00 இலட்சமும், உற்பத்தி சார்ந்த தொழில்களுக்கு அதிகபட்சமாக ரூ.10.00 இலட்சமும் வங்கிகள் மூலம் கடன் வசதி பெற வாய்ப்புள்ளது.

6) மான்ய தொகை திட்ட மதிப்பீட்டில் 25% வழங்கப்படும்.

7) விண்ணப்பத்துடன் இணைக்கப்பட வேண்டிய இதர ஆவணங்கள் இரு நகல்களில் சமர்ப்பிக்க வேண்டும்.

   - பள்ளி கல்லூரி மாற்று சான்றிதழ் நகல்
   - உறுதி மொழி பத்திரம் அசல் மற்றும் நகல்
   - குடும்ப அட்டை நகல்
   - விலைப்பட்டியல் அசல் மற்றும் நகல்
   - சாதிச்சான்றிதழ் நகல்

## பாரத பிரதம மந்திரியின் வேலைவாய்ப்பு உருவாக்கும் திட்டம் (PMEGP)

**தகுதிகள்**

1) சேவை பிரிவின் கீழ் அதிக பட்ச திட்ட அளவாக ரூ.10 இலட்சமும், உற்பத்தி பிரிவின் கீழ் அதிக பட்ச திட்ட அளவாக ரூ.25 இலட்சமும் வழங்கப்படும்.

2) இத்திட்டத்தின் கீழ் விண்ணப்பித்து பயன்பெற 18 வயது முடிந்தவராக இருக்க வேண்டும்.

3) இத்திட்டத்தில் 8-ஆம் வகுப்பு தேர்ச்சி பெற்றவருக்கு சேவை பிரிவு சார்ந்த தொழில்களுக்கு அதிகபட்சமாக ரூ.10,00,000 இலட்சமும், உற்பத்தி சார்ந்த தொழில்களுக்கு



அதிகபட்சமாக ரூ.25,00,000 இலட்சமும் வங்கிகள் மூலம் கடன் வசதி பெற வாய்ப்புள்ளது. சேவை பிரிவின் கீழ் ரூ.5 இலட்ச வரையிலான திட்ட அளவிற்கும் உற்பத்தி பிரிவின் கீழ் ரூ.10 இலட்சம் வரையிலான திட்ட அளவிற்கும் கல்வி தகுதி ஏதும் தேவையில்லை.

4) மான்ய தொகை நகர்புறமாக இருப்பின் திட்ட மதிப்பீட்டில் 25% கிராமப்புறமாக இருப்பின் திட்ட மதிப்பீட்டில் 35% வழங்கப்படும்.

5) விண்ணப்பத்துடன் இணைக்கப்பட வேண்டிய இதர ஆவணங்கள்

- ☛ பள்ளி / கல்லூரி மாற்று சான்றிதழ் நகல்
- ☛ குடும்ப அட்டை நகல்
- ☛ திட்ட அறிக்கை அசல் மற்றும் நகல்
- ☛ விலைப்பட்டியல் அசல் மற்றும் நகல்
- ☛ சாதிச்சான்றிதழ் நகல்
- ☛ கிராமபுறமாக இருப்பின் பஞ்சாயத்து தலைவர் / கிராம நிர்வாக அலுவலரிடம் மக்கள் தொகை கணக்கெடுப்பு சான்றிதழ்.

6) இத்திட்டத்திற்கு வலைதளம் மூலம் **www.kviconline.gov.in/pmegp/pmegpweb** என்ற முகவரியில் விண்ணப்பித்தல் வேண்டும்.

## புதிய தொழில் முனைவோர் மற்றும் தொழில் நிறுவன மேம்பாட்டு திட்டம் (NEEDS)

### தகுதிகள்

1) வயது வரம்பு விண்ணப்பதாரர் விண்ணப்பிக்கும் தேதியன்று 21 வயது முடிந்தவராகவும், பொது பிரிவை சார்ந்தவராக இருப்பின் 35 வயதிற்கு மிகாதவராகவும், சிறப்பு பிரிவை (SC/BC/MBC) சார்ந்தவராக இருப்பின் 45 வயதிற்கு மிகாதவராகவும் இருக்க வேண்டும்.

2) கல்வி தகுதி பட்டப் படிப்பு, பட்டய படிப்பு / அங்கீகரிக்கப்பட்ட பயிற்சி நிறுவனங்கள் மூலம் பெறப்பட்ட தொழில் சாரா பயிற்சி சான்றிதழ் பெற்றிருக்க வேண்டும்.

3) உற்பத்தி மற்றும் சேவை தொழில்கள் இத்திட்டத்தின் கீழ் துவங்கலாம்.

4) திட்ட மதிப்பீடு ரூ.10,00,000 /- ற்கு மேல் ரூ.5 கோடி-க்கு மிகாமல் இருக்க வேண்டும்.

5) திட்டமதிப்பீட்டில் 25 சதவீதம் அதிகபட்சமாக ரூ. 30.00 இலட்சம் தமிழக அரசால் மானியம் வழங்கப்படும்.

6) நிதியுதவி பெற்ற நிறுவனங்களுக்கு தமிழக அரசால் வழங்கப்பட கூடிய இதர மானியங்களும் மேலும் 3% வட்டி மான்யம் வழங்கப்படும்.

7) இத்திட்டத்திற்கு வலைதளம் மூலம் **www.msmeonline.tn.gov.in/needs** என்ற முகவரியில் விண்ணப்பித்தல் வேண்டும்.

8) இத்திட்டத்தில் முதல் தலைமுறை தொழில் முனைவோர் மட்டும் கடன் பெற தகுதியுடைவர்கள் ஆவார்கள்.

9) விண்ணப்பத்துடன் இணைக்கப்பட வேண்டிய இதர ஆவணங்கள் இரு நகல்களில் சமர்ப்பிக்க வேண்டும்.

- ☛ பள்ளி / கல்லூரி மாற்று சான்றிதழ் நகல்
- ☛ உறுதி மொழி பத்திரம் அசல் மற்றும் நகல்
- ☛ குடும்ப அட்டை நகல்
- ☛ விலைப்பட்டியல் அசல் மற்றும் நகல்
  சாதிச்சான்றிதழ் நகல்

உ
ஸ்ரீ காமாட்சி அம்மன் துணை



24 மனை தெலுங்கு செட்டியார்கள்
தெலுங்குபட்டி செட்டி, சாது செட்டி
சமுதாய பெருமக்கள் அனைவரும்,
எல்லா வளமும், நலமும் பெற்று
நிறை செல்வங்களுடன்,
நீண்ட ஆயுளுடனும் வாழ்வாங்கு வாழ
உலகளந்த மகாவிஷ்ணு,
அன்னை காமாட்சி தாயை
வேண்டி வணங்குகிறேன்.







என்றும் உங்கள் பாசத்துடன்:

தலைமை
சங்கத் தலைவர் **ரெ. நடராஜன்**

**24 மனை தெலுங்கு செட்டியார்கள் தலைமைச் சங்கம்**

155, ஈ.வே.ரா.பெரியார் நெடுஞ்சாலை,
கீழ்பாக்கம், சென்னை - 600 010.



# ஆனி மாத ஆன்மீக நிகழ்வுகள்

உத்திராயணப் புண்ணிய காலத்தின் கடைசி மாதமாகவும், தமிழ் மாதங்களில் மூன்றாவது மாதமாக மலர்கிறது ஆனி. இது தேவர்களின் மாலைப் பொழுது என்கிறது சாஸ்திரம். மேலும் ஆனிமாதம் இளவேனிற் காலம். கோடையின் தாக்கம் நீங்கி இதமான காற்று வீசும். இம்மாதத்தில் பல முக்கியமான நிகழ்வுகள் நடந்துள்ளதாக புராணங்கள் கூறுகின்றன.

ஆனி மாதம், உத்திரம் நட்சத்திரத்தன்று மாலை வேளையில் சிவாலயங்களில் நடராஜப் பெருமானுக்கு திருமஞ்சனம் நடைபெறும். அதேபோன்று வைணவத் திருத்தலங்களில் முதன்மையான ஸ்ரீரங்கம் திருத்தலத்தில் ஆனி கேட்டை நட்சத்திரத்தில் திருமஞ்சனம் எனப்படும் ஜேஷ்டாபிஷேகம் நடைபெறும். கோயில்களில் கும்பாபிஷேகங்கள் செய்ய உகந்த மாதமாகக் கருதப்படுகிறது. பல சிறப்புகளைக் கொண்ட ஆனி மாதத்தில் வரும் முக்கிய விசேஷங்கள் சிலவற்றைப் பற்றி அறிந்துகொள்வோம்.



### யோகினி ஏகாதசி

ஆனி மாத தேய்பிறையில் வரும் ஏகாதசிக்கு 'யோகினி ஏகாதசி' என்று பெயர். ஏகாதசி தினங்கள் எல்லாமே விஷ்ணு வழிபாட்டுக்கு உகந்த நாள். யோகினி ஏகாதசி தினத்தன்றுதான் அழகாபுரி மன்னனான குபேரன் விரதமிருந்து, திருமாலை வழிபட்டுத் தன் நோயைப் போக்கிக்கொண்டான்

### கூர்ம ஜயந்தி

திருமாலின் தசாவதாரங்களில் ஒன்றான கூர்மாவதாரம் ஆனி மாத தேய்பிறை துவாதிசி திதியில் நிகழ்ந்தது. தேவர்கள் பாற்கடலைக் கடைந்தபோது, பகவான் விஷ்ணு கூர்ம அவதாரம் எடுத்து மந்தார மலையைத் தாங்கி அமிர்தம் தோன்ற உதவிய தினம் இன்று. இந்த நாளில் பெருமாள் கோயில்களுக்குச் சென்று வழிபடுவது சிறப்பானது.

### அமாவாசை

முன்னோர்களுக்கு நேர்த்திக்கடன் செலுத்தி வழிபட உகந்த தினம், அமாவாசை நாள். ஆனி மாத அமாவாசை தினத்தில் நிகும்பலா, பிரத்யங்கரா ஆகிய தேவியரை வழிபட்டால் தீய சக்திகள் விலகி நன்மைகள் ஏற்படும்.

### மாணிக்கவாசகர் குருபூஜை

திருவாசகம் அருளிய மகான் மாணிக்கவாசகர். 32 ஆண்டுகளே வாழ்ந்தாலும் தன் வாழ்நாளில் பல்வேறு அற்புதங்களை நிகழ்த்திய மாணிக்க

வாசகர் சிதம்பரத்தில் ஆனி மாதம், மகம் நட்சத்திரத்தில் ஈசனோடு இரண்டறக் கலந்தார். அவரது குருபூஜை தினத்தையொட்டி இன்று சிவன் கோயில்களில் பல்வேறு சிறப்பு பூஜைகள் நடைபெறும்.



## அமர்நீதி நாயனார் குருபூஜை

சிவத்தொண்டு செய்வதையே தன் வாழ்நாள் இலக்காகக் கொண்டு வாழ்ந்த அமர்நீதி நாயனார் சிவபெருமானோடு ஐக்கியமானது ஆனி மாதப் பூரம் நட்சத்திர தினத்தில்தான். இவரது குருபூஜை தினத்தன்று சிவாலயங்களில் சிறப்பு பூஜைகள் நடைபெறும்.

## ஆனித் திருமஞ்சனம்

ஆடல் வல்லான் நடராஜருக்கு வருடத்தில் ஆறு அபிஷேகங்கள் மட்டுமே நடைபெறும். ஆனி மாத உத்திர நட்சத்திரத்தன்று ராஜசபை எனும் ஆயிரங்கால் மண்டபத்தில் சூரிய உதயத்துக்கு முன் அதிகாலையில் நடைபெறும் அபிஷேகமே ஆனித் திருமஞ்சனம் எனப் படுகிறது.

ஆனித் திருமஞ்சனத்தின் போது நடராஜரைத் தரிசித்தால் தோஷங்கள் அனைத்தும் விலகி வளம் பெருகும் என்பது ஐதிகம்.

## பௌர்ணமி தினம்

இந்த மாதத்தில் வரும் இரண்டாவது பௌர்ணமிநாள் இது. இந்த நாள் 'குருபூர்ணிமா' என்றும் வியாச பூர்ணிமா என்றும் போற்றப் படுகிறது. இந்த நாளில் அனைவரும் தங்கள் குருவை வணங்கி ஆசி பெற திருவருளும் குருவருளும் நிலைத்து நிற்கும். இதே தினத்தில்தான் பெண்களால் சாவித்ரி விரதமும் கடைப்பிடிக்கப்படுகிறது.



# எம்பிரான் அமர்நீதி நாயனார் ஆனி - பூரம் (400 - 600)



# P.M.P. கலை & அறிவியல் கல்லூரி




(இருபாலர் பயிலகம் – பெரியார் பல்கலைக்கழக இணைவு பெற்றது)

தோக்கம்பட்டி, தருமபுரி–5.

Ph : 04342 - 292681, 231682 Cell : 94432 59019




குறைந்த கட்டணம்

## U.G COURSES

B.Sc., Computer Science / Mathematics, Maths., (C.A) / Physics / Chemistry,

B.C.A., B.Com.,(C.A), B.B.A.,

B.Com., B.A., Tamil / English

நிறைந்த கல்வி

## P.G COURSES

M.Sc., Mathematics, Physics / Chemistry, M.Com.,

இலவச பேருந்து வசதி

### கல்லூரியின் சிறப்பம்சங்கள் :

- கடந்த 15 ஆண்டுகளாக கல்விப் பணியில் திறமையான மாணவர்களை உருவாக்கி மக்கள் மத்தியில் பெயர் பெற்ற அனுபவம் வாய்ந்த முதல் கலை அறிவியல் கல்லூரி.
- மாணவ, மாணவிகளின் ஒழுக்கம் மற்றும் பாதுகாப்பில் தனிக்கவனம்.
- உலகத்தரம் வாய்ந்த அடிப்படைக் கட்டமைப்பு வசதிகள் மற்றும் A/C வசதியுடன் கூடிய இயற்பியல், வேதியியல் மற்றும் கணினி ஆய்வகங்கள்.
- கல்லூரி பருவ கட்டணத்தை நான்கு தவணையாக செலுத்தும் வசதி.
- அனுபவம் வாய்ந்த முதல்வரின் சீரிய வழிகாட்டுதலில் தகுதியும் அனுபவம் வாய்ந்த பேராசிரியர்கள்.
- ஆண்டுதோறும் 80% மாணவர்கள் தேர்ச்சி பெற்று பட்டம் பெறுகின்றனர்.
- மத்திய, மாநில அரசுகள் வழங்கும் அனைத்து கல்வி உதவித்தொகையும் பெற்றுத் தரப்படுகிறது.
- IAS / IPS / TNPSC போட்டி தேர்வுகளுக்கு தனி பயிற்சி வகுப்புகள் மற்றும் மாதிரி தேர்வுகள்.
- SPOKEN ENGLISH, Personality Development மற்றும் Communication Skills போன்றவற்றிற்கு சிறப்பு வகுப்புகள்.
- Campus Interview– ல் முன்னனி நிறுவனங்களில் வேலைவாய்ப்பு பெற்றுத் தரப்படுகிறது. மேலும் சிறந்த மாணவர்களுக்கு பி.எம்.பி குரூப் நிறுவனங்களில் உடனடி வேலை வாய்ப்பு தரப்படுகிறது.
- அனைத்து வழித்தடங்களிலும் பாதுகாப்பான இலவசபேருந்து வசதி உண்டு.

# ஆயிரம் பிறை கண்ட அருமைத் தம்பதியர்



நமது 24 மனை தெலுங்குச் செட்டியார்கள் சமூகம் செம்பனார்கோவில் நகரில் வசித்து வரும் திரு. V.தக்ஷிணாமூர்த்தி செட்டியார் - திருமதி. கஸ்தூரி அம்மாள் தம்பதியினரின் சதாபிஷேக விழா 02-06-2016 அன்று நடைபெற்றது.

அவரது பிறந்த நாளான 02-06-2020 அன்றுடன் ஆயிரம் பிறைகள் நிறைவுற்றதை சிறப்பாகக் கொண்டாடினர். ஆயிரம் பிறை கண்ட அருமைத் தம்பதியரிடம் அனைவரும் ஆசிபெற்றுச் சென்றனர்.

பிறந்த நாள் விழாவுக்கு குலமுரசு வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறது.

தகவல்: **Er.S.தியாகராஜன்,** ஸ்ரீரங்கம்





# மணக்கோலம்

புதிய சந்தா, புதுப்பித்தல், முகவரி மாற்றம் மற்றும் மணக்கோலம் பகுதியில் சேர்க்க மற்றும் திருத்தம் செய்ய தொடர்பு கொள்ளவேண்டிய செல்பேசி எண்: **99 65 900 990**

## மணக்கோலம் வாசகர்கள் கவனத்திற்கு

- மணக்கோலம் பகுதி வெளிப்படையானது. நம் இனமக்கள் வரன் தகவல்களைப் பகிர்ந்து கொள்ள உதவும் இலவச சேவைப் பகுதி. இது விளம்பரம் அல்ல. இதற்கு தனியாகக் கட்டணம் கிடையாது.
- மணக்கோலம் பகுதியில் வரன் விபரம் வெளியிட 24 மனை குலமுரசு இதழுக்கு ஆண்டு சந்தாதாரராக இருக்கவேண்டும் என்பது மட்டுமே விதிமுறை.
- இப்பகுதியில் வரன் பற்றிய தகவல்கள் மூன்று மாத இதழ்களில் தொடர்ந்து வெளியிடப்படும். மூன்று மாதங்களில் வரன் அமையாதவர்கள் மீண்டும் மூன்று மாதங்கள் மறுபிரசுரம் செய்து கொள்ளலாம். இம்முறையில் ஆண்டு சந்தா நிறைவடையும் காலம் வரை ஒருவர் நான்கு முறை மறுபிரசுரம் செய்து கொள்ளலாம்.
- மணக்கோலம் பகுதியில் மறுபிரசும் செய்ய, விபரம் சேர்க்க, சந்தா விபரம் அறிய 99 65 900 990 என்ற செல்பேசி எண்ணிற்கு தொடர்பு கொள்ளவும் அல்லது manakolam24@gmail.com என்ற மின்னஞ்சலில் தெரிவிக்கவும்.
- வரன்களுக்குத் திருமணம் உறுதிசெய்யப்பட்டால் சேவை மைய எண்ணில் தொடர்பு கொண்டு வரன் தகவலை நீக்கிக் கொள்ளலாம்.
- மணக்கோலம் மூலமாக வரன் அமைந்தவர்கள் திருமணப் படத்தை குலமுரசில் வெளியிட விபரங்களுடன் அனுப்பிவைத்தால், வெளியிடப்படும்
- ஒவ்வொரு மாதமும் 5ம் தேதிக்கு முன்பு வரும் வரன் தகவல்கள் மட்டுமே அம்மாத இதழில் இடம்பெறும். அதற்குப்பின் வருபவை அதற்கடுத்த இதழில் இடம்பெறும்.
- இப்பகுதியில் வெளியாகும் வரன் விபரங்களுக்கு வெளியிடும் குடும்பத்தாரே முழுப் பொறுப்பு. மணமகன் அல்லது மணமகள் குறித்த விபரங்களை சம்பந்தப்பட்ட குடும்பத்தாரே தொடர்பு கொண்டு விசாரித்து தங்களுடைய சொந்தப் பொறுப்பில் திருமணங்களை உறுதி செய்துகொள்ளவும்.
- வணிக நோக்கமுடையவர்கள் – இடைத்தரகர்கள் எந்த நிலையிலும் மணக்கோலம் பகுதியைப் பயன்படுத்தி பணம் வசூலிப்பதோ – நகல் எடுத்து விற்பனை செய்வதோ – வேறு வழிகளில் பயன்படுத்துவதோ கூடாது.
- 24 மனை குலமுரசு இதழுக்கு தபால், மின்னஞ்சல் மற்றும் வாட்ஸ்அப் மூலமாக வரும் வரன் விபரங்களை நாங்கள் எவருடனும் பகிர்ந்து கொள்வதில்லை. வேறு தளங்களிலும் நாங்கள் வெளியிடுவதில்லை.

**மணக்கோலம் பக்கங்களில் இடம்பெறும் தனிநபர் தகவல்கள் (Privacy Reasons) பொதுவெளியில் பகிர்வதைத் தவிர்க்க இந்த PDF மின்இதழில் மணக்கோலம் பகுதி சேர்க்கப்படவில்லை.**

**மணக்கோலம் பகுதியுடன் இணைந்த 24 மனை குலமுரசு மின்இதழைப் படிப்பதற்கான இணைய முகவரி (Weblink) குறுஞ்செய்தியாக (SMS) சந்தாதாரர்களின் பதிவு செய்யப்பட்ட கைபேசி எண்ணிற்கு தனியே அனுப்பிவைக்கப்பட்டுள்ளது.**

**இணைய இணைப்புள்ள கைபேசி மற்றும் கணினிகள் வழியாக மட்டுமே இந்த இதழைப் படிக்கமுடியும். பதிவிறக்கம் செய்ய முடியாது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம்.**

# மணக்கோலம்

## கட்டணமில்லாத இலவச சேவை

1. 24 மனை குலமுரசின் மணக்கோலம் பகுதி வெளிப்படையானது. வரன் வேண்டுவோர் பயன்பாட்டிற்கான இலவசச் சேவை இது. வணிக நோக்குடையவர்கள் - இடைத்தரகர்கள் எந்த நிலையிலும் மணக்கோலம் பகுதியைப் பயன்படுத்தக் கூடாது.
2. மணக்கோலம் பகுதிக்கு விண்ணப்பிப்பவர்கள் குலமுரசு சந்தா தாரர்களாக வேண்டும்.
3. வரன் தகவல்கள் 3 மாத இதழ்களில் மட்டுமே வெளியிடப்படும். ஏராளமானவர்கள் விண்ணப்பம் செய்வதால் தொடர்ந்து வெளியிட இயலவில்லை. 3 மாதங்களுக்குப் பிறகு மீண்டும் விண்ணப்பம் தந்தால் மறுபடியும் 3 மாதங்களுக்கு வெளியிடப்படும்.
4. வரன்களுக்கு திருமணம் நிச்சயமாகிவிட்டால் உடனடியாகத் தெரிவிக்க வேண்டும்.
5. மணக்கோல விண்ணப்ப மாதிரிப் படிவம்

1. பெயர் ..................................................
2. படிப்பு ..................................................
3. பணி ................. 4.வருமானம் ...........
5. வீடு 8 / 16 6. குலம் ..................
7. பிறந்தநாள் ......................................
8. ராசி. .................... 9.நட்சத்திரம்.........
10. பெற்றோர் பெயர் ............................
11. ஊர் ..... ..........................................
12. தொலைபேசி எண்: ........................

மேற்கண்ட அனைத்துத் தகவல்களுடன் குலமுரசுக்கு சந்தா செலுத்தியதற்கான DD அல்லது செலானையும் ஸ்கேன் செய்து **manakolam24@gmail.com** என்ற மின்னஞ்சல் முகவரிக்கு அனுப்பிவைக்கவும்.

# 24 மனை குலமுரசு

## ஆண்டு சந்தா ரூ. 200/- மட்டுமே

## சந்தா செலுத்துவது எப்படி?

Account Name : 24 MANAI KULAMURASU
Bank Name : CANARA BANK
Branch : CHENNAI KILPAK
Account Number : SB. A/c. 1650101014869
IFSC CODE : CNRB0001650

மேற்கண்ட வங்கிக் கணக்கில் ஆன்லைன் மூலம் ரூ.200/- செலுத்தி அதன் பரிவர்த்தனை விபர ஸ்கிரீன்ஷாட்-ஐ **9965 900 990** என்ற வாட்ஸ்அப் [அ] kulamurasuoffice@gmail.com என்ற மின்னஞ்சல் முகவரிக்கு உங்கள் முகவரி மற்றும் செல்போன் எண் குறிப்பிட்டு அனுப்பவும்.

கனரா வங்கியில் செலான் மூலம் பணமாக செலுத்துவோர் சந்தா ரூ.200 + வங்கி சேவைக் கட்டணம்+ GSTவரி ரூ.60 சேர்த்து ரூ.260/-ஐ கனரா வங்கிக் கணக்கில் செலுத்தி, கௌண்டர் ஃபைல் ரசீது நகலுடன் உங்கள் முகவரி எழுதி மின்னஞ்சல் [அ] வாட்ஸ்அப் [அ] தபாலில் அனுப்பவும்.

**24 மனை குலமுரசு,**
**330/1, சின்னாண்டான் கோவில் வீதி,**
**கரூர் - 639001.**
**Customer Care Cell: 9965 900 990**

- பிரதி மாதம் 1-ஆம் தேதி வரை வரும் கடிதங்களுக்கு அந்த மாதத்திலிருந்து குலமுரசு அனுப்பிவைக்கப்படும்.
- பிரதி மாதம் 2-ஆம் தேதிக்கு மேல் வரும் கடிதங்களுக்கு அடுத்த மாதத்திலிருந்து குலமுரசு அனுப்பி வைக்கப்படும்.
- குலமுரசு சந்தா பெறப்பட்டவுடன் உங்களுக்கென்று ஒரு ID எண் உங்கள் செல்போனுக்கு SMS மூலம் தெரிவிக்கப்படும்.

## குலமுரசு வரவில்லையா?

உங்கள் ID எண் குறிப்பிட்டு **9965 900 990** என்ற தொலைபேசி எண்ணுக்கு தகவல் தெரிவிக்கவும். அல்லது kulamurasuoffice@gmail.com - என்ற மின்னஞ்சல் முகவரிக்கு அனுப்பவும்.




# வாசகர் குரல்

வாசகர்களின் விமர்சனங்கள் வரவேற்கப்படுகின்றன.
வாசகர்கள் எழுதும் நிறை, குறை அனைத்தும்
ஒளிவுமறைவின்றி வெளியிடப்படும்.

வணக்கம் ஐயா..

குலமுரசு வாசித்தேன். கொரோனா நிவாரண படங்கள்.. சுற்றுச்சூழல் கட்டுரை... ஆய்வாளர் ஆனந்தகுமார் பற்றிய தகவல், சமையல் குறிப்பு, பிஸ்தா என சிறப்பான இதழாக வந்துள்ளது... மீரா கவிதை, அண்ணனின் இரங்கற் பா அனைத்தும் சிறப்பு.. தலையங்கம் அருமை.. வாழ்த்துக்கள்..

**- கவிஞர் ஜெயதேவன்,** வத்தலகுண்டு.

ஓ ஓ ஓ

நம் இனமக்கள் பொதுவாகவே புத்திசாலிகள், அறிவாளிகள். எந்தத் துறைக்குப் போனாலும் அதில் முத்திரையைப் பதிப்பார்கள். விஞ்ஞானி னுச.ஆனந்த்குமார் அவர்கள் பற்றிய கட்டுரை அதை உண்மையாக்குகிறது.

உலகத்தையே அச்சுறுத்தும் ஒரு வைரசுக்கு மருந்து கண்டுபிடிக்கும் - இந்திய - தேசிய - அளவிலான விஞ்ஞானிகள் குழுவில் நம் இனத்தவர் னுச. ஆனந்த்குமார் அங்கம் வகிக்கிறார் எனில் அது நம் இனத்திற்கே கிடைத்த பெருமை. அவரைப் பற்றிய விபரத்தை வெளியிட்ட குலமுரசுக்குப் பாராட்டுதல்கள்.

**- எம். நந்தகுமார்,** தஞ்சாவூர்.

ஓ ஓ ஓ

பெருமைக்குரிய நம்மினத்தவர் எங்கிருந்தாலும் அவரைத் தேடிப்பிடித்து அவரைப் பற்றிய விரிவான செய்திகளை வழங்கிப் பெருமைப்படுத்தும் அரும்பணியை குலமுரசு தொடர்ந்து செய்து வருகிறது. அந்த வகையில் நோய்த்தொற்றியலில் முனைவர் பட்டம் பெற்று தேசிய அளவில் புகழ் பெற்ற Dr. ஆனந்த் குமார் அவர்களைப் பற்றி எழுதிய குலமுரசு ஆசிரியருக்கு மனமார்ந்த பாராட்டுதல்கள்.

**- இரா.கனகராஜன்,** ஆத்தூர்.

ஓ ஓ ஓ

சமுதாயப் பணிகள் சிறக்க வாழ்த்துக்களை கோவை மாவட்டம் பொள்ளாச்சி தாலுகா கோட்டூர் இளைஞர் சங்கத்தின் சார்பில் தெரிவித்துக் கொள்கிறேன்.

**- உதயகுமார்,** கோட்டூர்.

ஓ ஓ ஓ

அய்யா வணக்கம்,

மிகப் பிரபலமான மாத, வார இதழ்கள் எல்லாம் வெளிவராமல் முடங்கிக் கிடக்கின்ற கால கட்டத்தில் குலமுரசு இதழ் மின்னிதழாக வெளி வந்து தனது ஆற்றலை வெளிப் படுத்தியுள்ளது. குலமுரசுக்கு வாழ்த்துக்களும் பாராட்டுதல்களும்.

**- ராணி அங்குராஜ்,** சிம்மக்கல், மதுரை.

ஓ ஓ ஓ

தலைமைச் சங்கத்தின் ஓர் அங்கமாக இருந்து தலைவர் K.C.P. அவர்களின் அணுக்கத் தொண்டராக இருந்து, இனப்பணியிலும் சமூக சேவையிலும், கல்வித் தொண்டிலும் சிறந்து விளங்கிய வடுகபட்டி K.B. துரைராஜ் அவர்களின் மறைவுக்கு புகழ்பெற்ற தமிழாசான் பெரும்புலவர் பண்ணைக் கோமகன் ஐயா எழுதிய இரங்கற்பா அற்புதமாக இருந்தது. பாராட்டுதல்கள்.

**- ம.சுந்தரபாண்டியன்,** திருச்சி.

ஓ ஓ ஓ

கடந்த மாதக் குலமுரசு இதழின் அட்டைப் படத்தைப் பார்த்து அசந்துவிட்டேன். பசுமையான சோலை - ரம்மியமான சூழல் - நீரோடை - மான்கள். மேலும் அழகோவியம் ஒவ்வொன்றையும் பார்ப்பதற்கே பரவசமூட்டியது. நல்ல அழகுணர்ச்சி யுடன் தேர்ந்தெடுக்கப்பட்ட அட்டைப் படம். பாராட்டி மகிழ்கிறேன்.

**- K.ரவீந்தரன்,** மைசூரு.

ஓ ஓ ஓ

சுற்றுச்சூழல் தினத்தை முன்னிட்டு அருமையான கட்டுரையை வெளியிட்டிருந்தீர்கள். இயற்கையும் இறைவனும் மனித இனத்திற்கு அளித்த மகத்தான கொடையை மாசுபடுத்தி நம்மை அழித்துக் கொள்ளுகிறோம். சுற்றுச் சூழலைப் பற்றிய தங்கள் விளக்கம் விழிப்புணர்ச்சியை ஊட்டவல்லது. அற்புதம்.

**- R.S.கார்த்திகேயன்,** திருமழிசை.

ஓ ஓ ஓ

எங்கள் மதிப்பிற்குரிய மாமா கரூர் கே.சி.பி. அவர்களின் இனப்பணி
இன்றுபோல் என்றும் தொடர வணங்கி வாழ்த்துகிறோம்

**Arya Hi-Tech Energies Private Limited**







SCC/IN/OHSAS/1028

**An ISO 9001 : 2008 & OHSAS 18001 : 2007 Company**

Turnkey Energy Solution For Power & Thermal Application

Manufacturer of Biomass Gasifier, EPC - Solar Power Plant, Bio Gas Plant



**cream stone**

*We serve with all our heart....*
*Best Ice cream concepts in India...*

*Aurum Creamy Zone*

We take corporate and outdoor catering orders.

*Stores @*

PEELAMEDU
Near PSG Tech., SMS Hotel Campus
Peelamedu, Coimbatore - 04.
Cell : 84899 17011 | 0422 4276178

R.S. PURAM
Opp. to Eye Foundation
R.S. Puram, Coimbatore - 02.
Cell : 84899 17002 | 84899 17011

Corp. Office : 76, Patel Road, Ram Nagar, Coimbatore - 641 009
Phone : +91 422 2232897, 4379344, Fax : +91 422 22 33 7 55
E-mail : info@arrya.net / arrya_cbe@arrya.net Website : www.arrya.net

*With Best Compliments From*

V.S. Prakasam Kummar | K.C.P. Kalaiarassee




# அரசி லாட்ஜ்

## அதிநவீன தங்குமிடம் மற்றும் உணவகம்



**K.C.பழனிசாமி** Ex.M.P., Ex.M.L.A.,




- **F** கரூர் பேருந்து நிலையத்திலிருந்து ½ கி.மீ. அருகாமையில்
- **E** ரயில் நிலையத்திலிருந்து ½ கி.மீ. அருகாமையில்
- **A** NH7 பிரதான சாலைக்கு ½ கி.மீ. அருகாமையில்
- **T** சுத்தமான மற்றும் தரமான உணவு வகைகள்
- **U** அனைத்து வகை உணவு வகைகளும் கொண்ட நவீன உணவகம்
- **R** தரமான சேவை குறைவான கட்டணத்தில்
- **E** உங்கள் தேவைக்கேற்ப ஏ/சி மற்றும் நான் ஏ/சி அறைகள்
- **S** வாகன நிறுத்துமிடம் மற்றும் 24 மணி நேர வாகன பாதுகாப்பு வசதி

LED Tv with all Prime Channels | Well Furnished AC Room | Laundry Service | Driver Accommodation | Courier on Call | Doctor on Call | Taxi on Call | ATM Facility | 24x7 Hot & Cold Water Supply | 24x7 Room Service | Credit / Debit Cards | Secured Car Parking









506, ஜவஹர் பஜார், கரூர் - 639001.

தொலைபேசி: +91 (O) 4324-262663 கைபேசி: +91 98429 10022

E-mail: araseelodge@gmail.com Website: www.araseelodge.com

உழைப்பும் வாழ்வும் ஒன்றோடொன்று பின்னிக்கிடப்பவை. இரண்டிற்கும் அதிக இடைவெளி கிடையாது. உழைப்பில் இருந்து ஒதுங்குகிறவன் வாழ்வில் இருந்து ஒதுங்குகிறான். நாம் உழைக்க வேண்டிய அவசியம் இல்லாதபடி உடல் உழைப்பிற்கு ஆள் வைத்திருப்பவர்களை அதிர்ஷ்டசாலி என்று புகழுகிறோம். உண்மையில் இது முட்டாள்தனம். சின்னச் சின்ன வேலைகள் கூட செய்ய சிலர் தயாராக இல்லாததால் சிலர்வெகு அதிகமாக உழைக்க வேண்டி இருக்கிறது. மூளையைக் கசக்கும் வேலை உள்ளவர்களும் கொஞ்சமாவது உடல் உழைப்பு செய்தால் தான் வாழ்வின் முழு சந்தோஷத்தையும் அனுபவிக்க முடியும். உடல் உழைப்பு இல்லாதவர்களால் மகிழ்ச்சியாக இருக்க முடியாது.



ஆப்ரஹாம் லிங்கன் அமெரிக்க ஜனாதிபதியாக இருந்த போது அவரை வெளியில் அழைத்துச் செல்ல இராணுவத் தளபதி ஜனாதிபதி இல்லம் வந்தார். அப்போது லிங்கன் தம்முடைய ஷூவுக்கு பாலிஷ் போட்டுத் துடைத்து அழகுபார்த்துக் கொண்டிருந்தார்.



# உழைப்பே உயர்வு



ஜனாதிபதி ஷூ பாலிஷ் போடுவதைப் பார்த்துப் பதறிய தளபதி “உங்கள் ஷூவுக்கா பாலிஷ் போடுகிறீர்கள்...” என்று இழுத்தார். புன்னகை பூத்த லிங்கன், “ஆமாம். நீங்கள் வேறு யார் ஷூவுக்கு பாலிஷ் போடுவீர்கள்” என்று கிண்டலடித்தபடி ஷூவை மாட்டிக் கொண்டு புறப்பட்டார். “மற்றவர் ஷூவுக்கு நான் ஒன்றும் பாலிஷ் போட்டதில்லை. மற்றவர்கள் தான் என் ஷூவுக்குப் பாலிஷ் போடுவார்கள்” என்று கர்வம் பொங்க கர்ஜித்தார் தளபதி.... “அப்படியா... அது இன்னும் அவமானகரமான விஷயம். நமக்காகப் பிறரை வேலை வாங்குவது வெட்கப்பட வேண்டிய குணம்” என்றார் லிங்கன்.

தன் வேலையைத் தான் பார்ப்பது என்பது ஒன்றும் வெட்கப்பட வேண்டிய விஷயம் இல்லை. உடல் உழைப்பு ஒருவரை உற்சாகமாக வைக்கும், உன்னத மருந்து. இளமையைக் காப்பாற்றும் மன்மத லேகியம் அது. உழைப்பவருக்கு உடம்பின் நாபிச் சக்கரத்தில் இருந்து சக்தி பொங்குவதால் இடுப்பு சிக்கென்று இருக்கும். அளவு கடந்த ஆரோக்யம் உழைப்பின் இலவச இணைப்பு.



சொல்வேந்தர் சுகிசிவம்

ஒரு வாளி தண்ணீரில் அதிகபட்சம் எத்தனை பாத்திரம் கழுவ முடியும் என்று போட்டி வைத்தால் அகில இந்திய அளவில் அதில் ஜெயிக்கக் கூடியவர் மகாத்மா காந்தி மட்டுமே. காரணம் தம் ஆஸ்ரமத்தில் பலமுறை பலருக்கும் பாடம் நடத்தி வந்தவர் அவர். தம் அறையைத் தாமே கூட்டுவது, தம் துணியைத் தாமே துவைப்பது என்று உழைப்புக்கும் வாழ்வுக்கும் உள்ள தொடர்பைத் துண்டிக்காத உத்தமர் அவர்.

உழைப்பையே பிறருக்காகச் செய்யும்போது அதுவே பூஜையாகி விடுகிறது என்பார்.



ஒரு ஜப்பானிய ஜென்குரு முதுமையடைந்த பின்னரும் தோட்டத்தில் வேலை செய்ய வந்து விடுவார். எவ்வளவு சொல்லியும் அவர் கேட்கவில்லையே என்று வருந்திய சீடர்கள் மண்வெட்டி, கடப்பாரை ஆகியவற்றை ஒளித்து வைத்து விட்டார்கள்.

காலை தோட்ட வேலைக்கு வந்த குரு ஏமாற்றம் அடைந்தார். மடாலயம் வந்த அவர் அன்று முழுவதும் உண்ணவே இல்லை. சீடர்கள் வற்புறுத்தியும் உண்ண மறுத்துவிட்டார். “உழைக்காதவனுக்கு உண்ண உரிமை இல்லை” என்று உறுதியாகச் சொல்லிவிட்டார். வேறு வழியின்றி மறுநாள் மண்வெட்டியும் கடப்பாரையும் அவர் வசம் தரப்பட்டது!

சந்தோஷமாக உழைத்தார் சந்தோஷமாகச் சாப்பிட்டார்.

ரமண மகரிஷி பூவரசம் இலையைத் தென்னங்குச்சிகளில் கோர்த்து சாப்பாட்டு இலை தயாரிப்பார். அரிசியில் கல் எடுப்பார். காய்கறித் தோலை நறுக்கி துவையல் அரைப்பார். ஆத்ம ஞானி தான் என்றாலும் சரீரம் வேலை செய்ய வேண்டும் என்பது அவர் அபிப்ராயம்! எத்தனை சாமியார்கள் இன்று இப்படி இருப்பார்கள்?

ஓர் அரசர் பக்கத்து ஊருக்கு வருவதாகக் கேள்விப்பட்டு ஊர்மக்கள் எல்லாம் காடு கழனி வேலைகளை விட்டுவிட்டு வேடிக்கை பார்க்கப் போனார்கள். அரசர் ஏதாவது கொடுப்பார் என்றும் ஓர் எண்ணம். ஒரு கிழவி மட்டும் அப்படிப் போகாது மர நிழலில் உட்கார்ந்து கூடைமுடைந்து கொண்டிருந்தாள். அங்கு வந்த பிச்சைக்கார வழிப் போக்கன் “பாட்டி நீ அரசரைப் பார்க்க போகவில்லையா” என்றான். “வெட்டிப் பயல்கள் வேலை இல்லாமல் போய்விட்டார்கள். நான் உழைக்காமல் போனால் என் குடும்பத்துக்கு யார் சோறு போடுவார்கள்” என்று படுசூடாகப் பதில் கொடுத்தாள் பாட்டி. கலீர் என்று சிரித்த பிச்சைக்காரன் அரச முத்திரையிட்ட தங்க மோதிரத்தைப் பாட்டியிடம் நீட்டினான். திடுக்கிட்டு அவனைப் பாட்டி பார்த்ததும் “அரசனைத் தரிசிக்க போனவர்கள் திரும்பி வந்ததும், உழைத்துப் பிழைக்கும் உன்னை வந்து அரசரே தரிசித்தார் என்று இதைக் காட்டு” என்று கொடுத்துவிட்டு சிட்டாய்ப் பறந்தார் அரசர்.



உழைப்பதன் மூலம் சக்தி விரயமாவதாகப் பலர் தவறாக நினைக்கிறார்கள். இல்லை அது மேலும் பலமடைகிறது. உடல் நலிவடைவதில்லை. பொலிவடைகிறது.

உழைத்தவனுக்குப் பசி என்கிற பரிசு கிடைக்கிறது. பசி செரிமானம் என்ற சிறப்பு செய்கிறது. உழைக்காதவனுக்கு உடம்பெல்லாம் வலிக்கிறது. உழைத்தவனுக்கோ உடம்பு ஜொலிக்கிறது.






# KANTHASAMY METAL ROLLING MILLS

**Manufacturers of : ALUMINIUM SHEETS, CIRCLES & VESSELS**

5/432-A, Kuppiyode, Maruharoad, PALAKKAD - 678 007.
E-mail: kanthaswamypalakkad@gmail.com
Phone: 0491-2572886, Mobile: 98430 54999

# RADHA METAL INDUSTRIES

**Manufacturers & Dealers in ALUMINIUM VESSELS & CIRCLES**

11/1434, Market Road, PALAKKAD - 14. Kerala.
E-mail: radhametalpalakkad@gmail.com
Phone: 2500610, 2502578, Mobile: 9447100891

**K.ராஜமன்னார் - R.மகாலட்சுமி மற்றும் குடும்பத்தார்,**

83, சர் சண்முகம் ரோடு, கோயம்புத்தூர் - 641002.



**தெய்வத்திரு. அருட்செல்வர். எம்.சண்முகம் செட்டியார்**

**திருமதி. குஞ்சம்மாள் சண்முகம்**




**SULOCHANA COTTON SPINNING MILLS PVT LTD**

424, 426, Kamaraj Road, Tirupur - 641 604.

Phone : 0421-2211824 / 826  Fax : 0421-4321540

Web : www.sulochanamills.com / sales@sulochanamills.in

# வருந்துகிறோம்





உடுமலைப்பேட்டை காமாட்சியம்மன்
திருக்கோயில் முன்னாள் அறங்காவலர்
அமரர். N.**கிருஷ்ணசாமி செட்டியார்** அவர்களது
துணைவியாரும், திரு.N.K.**நந்தகுமார்**
மற்றும் கோவை 24 மனை மருத்துவ உதவிக்குழு
**Dr.N.K.கார்த்திகேயன்** அவர்களது தாயாருமான
திருமதி. **K.குங்குமதிலகம்** அவர்கள்
26-05-2020 அன்று இறைவனடி சேர்ந்தார்.

நாமக்கல் கோவிந்தம்பாளையம் செட்டுமை
திரு. **T.A.ராயப்ப செட்டியார்** அவர்கள்
04-06-2020 அன்று இறைவனடி சேர்ந்தார்.

இவர்களது மறைவுக்கு குலமுரசு தனது ஆழ்ந்த இரங்கலையும்,
அஞ்சலியையும் தெரிவித்துக் கொள்கிறது.



- ★ புள்ளிகள் மற்றும் கோடுகள் கொண்ட முட்டைகளை பவழக்கால் நாரைகள் இடும்.
- ★ வரகு கோழிகளின் முட்டைகள் மஞ்சள் நிறத்தில் இருக்கும்.
- ★ கருடனின் முட்டை சாம்பல் நிறம்.
- ★ கடல் அர்ச்சின் என்ற பறவை ஆரஞ்சு நிற முட்டைகளை இடும்.
- ★ செந்தலைக் கிளிகளின் முட்டைகள் வெண்ணிறத்தில் கோள வடிவில் இருக்கும்
- ★ ஒரு நொடியில் 40-இல் ஒரு பங்கு நேரத்தைத்தான் ஒருமுறை இமைப்பதற்கு கண்கள் எடுத்துக் கொள்கின்றன.
- ★ சராசரி ஆயுளுள்ள மனிதன் தன் வாழ்நாளில் 250 மில்லியன் முறை தனது கண்களை இமைக்கிறான்.
- ★ இஸ்ரேல் நாட்டின் அதிபர் பொறுப்பை ஏற்கும்படி 1952-ம் ஆண்டு அறிவியல் அறிஞர் ஆல்பர்ட் ஐன்ஸ்டீனுக்கு அழைப்பு வந்தது. ஆனால் அதை ஏற்க அவர் மறுத்துவிட்டார்.






★ இரும்பு வாணலி, தோசைக்கல் போன்றவற்றில் பிசுக்கு படிந்திருக்கிறதா? சாண்ட் பேப்பர் எனப்படும் உப்புக் காகிதம் கொண்டு பிசுக்கு பிடித்த பகுதியின் மேல் தேய்த்தால்... அவை உதிர்ந்துவிடும். நெடுநாட்களாகப் படிந்த கெட்டியான பிசுக்காக இருந்தால், தோசைக்கல்லை சூடாக்கி, ஒரு கத்தியால் முடிந்தவரை அவற்றை சுரண்டிவிட்டு, பிறகு உப்புக் காகிதத்தால் தேய்க்கவும்.

★ மிக்ஸியை அடிக்கடி உபயோகிப்பவர்கள், உறை போட்டு மூடி வைப்பது கஷ்டம். அதனால் ஜார் பொருந்தும் பகுதியில் தூசு படாமல் இருக்க, பொருத்தமான தட்டு ஒன்றை அதன் மீது வைத்து மூடி வைத்தால், பிரச்னை தீர்ந்தது!

★ குடமிளகாய் பொரியல் உதிர் உதிராக வர வேண்டுமா? கால் கிலோ காய்க்கு, இரண்டு டேபிள் ஸ்பூன் பொட்டுக்கடலை, ஒரு டேபிள் ஸ்பூன் துருவிய தேங்காய், விதை நீக்கிய மிளகாய் வற்றல் ஐந்து அல்லது ஆறு, ஒரு டீஸ்பூன் சீரகம், தேவையான உப்பு, இரண்டு பல் பூண்டு (விருப்பப்பட்டால்) இவற்றை மிக்ஸியில் பொடித்துக் கொண்டு, குடமிளகாயை வதக்கும்போது மேலே தூவவும். பொரியல் உதிர் உதிராக இருப்பதுடன்... சுவையும் அருமையாக இருக்கும்.

★ அரிசி களைந்த இரண்டாவது கழுநீரை சமையலுக்குப் பயன்படுத்தலாம். இதில் வைட்டமின் B6 மற்றும் B12 இருக்கிறது. இந்த நீரில் புளி ஊற வைக்கலாம், காய்கறி வேக விடலாம்.

★ உருளைக்கிழங்கு பொரிக்கும் முன்பு சிறிதளவு பயத்தம் மாவை தூவுங்கள். பொரியல் மொறு மொறுப்பாக, சுவை அசத்தலாக இருக்கும்.

★ மிளகாய் வத்தலை வறுக்கும் முன்பு, அதனுடன் அரை தேக்கரண்டி உப்பைச் சேர்த்தால் நெடி வராது.

★ சக்கரைப் பொங்கல் செய்யும்போது அரை கப் தேங்காய் பால் ஊற்றிக் கிளறி இறக்கினால், பொங்கல் மிகவும் சுவையாக இருக்கும்.

★ தேங்காய்த் துருவல் மீதியானால், அதை லேசாக வதக்கி சிறிது உப்பு சேர்த்து வைத்தால் மறுநாள் சமையலுக்குப் பயன் படுத்திக் கொள்ளலாம்.

★ முந்திரி பருப்பை எறும்பு அழிக்காமல் இருக்க சிறிதளவு பச்சை கற்பூரத்தை போட்டு வைக்கலாம்.

★ உளுந்துவடை செய்யும் போது மாவுடன் வேகவைத்த உருளைக் கிழங்கை மசித்து கலந்து வடை செய்தால், வடை எண்ணெய் குடிக்காமல் மொறு மொறுவென்று ருசியாக இருக்கும்.

★ பூரிக்கு மாவு பிசையும் போது தண்ணீருக்கு பதிலாக ஒரு கப் பாலைச் சேர்த்து பிசைந்தால் பூரி ருசியாக இருப்பதோடு மிருதுவாகவும் இருக்கும்.

★ காய்கறிகள் வறுக்கும்போது, எண்ணெய் சூடாகும் போது சிறிது சர்க்கரை சேர்த்து செய்தால் சுவையாக இருக்கும்.

★ கட்டிப் பெருங்காயத்தை சின்னச் சின்னத் துண்டுகளாக்கி, வெறும் வாணலியில் வறுக்கவும். வெள்ளையாகப் பொரிந்து வந்ததும், அடுப்பை அணைத்துவிட்டு, பெருங்காயத் துண்டுகள் ஒன்றோடொன்று ஒட்டிக் கொள்ளாமல் இருக்க, மேலே கொஞ்சம் கோதுமை மாவு அல்லது அரிசி மாவு தூவுங்கள். ஆறியதும் டப்பாவில் எடுத்து வைத்துக் கொண்டால், சட்டென எடுத்து உபயோகிக்க முடியும்.

இயற்கை

# மழலைகளின் மாமருந்து

# வசம்பு



வசம்பு (Acorus calamus, பொதுவாக Sweet Flag அல்லது Calamus ) ஒரு மூலிகை ஆகும். இது பேர் சொல்லா மருந்து, பிள்ளை வளர்த்தி, மற்றும் உரைப்பான் என்றும் அழைக்கப்படுகிறது.

வசம்பு அரபு நாடுகளையோ இந்தியாவையோ சேர்ந்ததாக இருக்கலாமெனக் கருதப்பட்டாலும், அவை தவிர ஐரோப்பா முழுவதிலும், தென் உருசியாவிலும், சின்னாசியாவின் வடக்கிலும், தென் சைபீரியா, சீனா, இந்தோனேசியா, யப்பான், மியான்மர், இலங்கை, ஆஸ்திரேலியா, தென் கனடா, ஐக்கிய அமெரிக்காவின் வடபகுதி ஆகிய இடங்களிற் பரவலாகக் காணப்படுகிறது.



### வளரியல்பு

வசம்பு ஆறு, ஏரிக்கரையோரங்களில் வளரும் ஒரு வகைப் பூண்டு. இதன் பிறப்பிடம் தென்கிழக்கு அமெரிக்கா. இது இந்தியாவில் மணிப்பூரிலும், நாகமலையிலும் கேரளாவிலும் அதிகமாக வளர்கிறது.

சதுப்பு நிலங்கள், களிமண் மற்றும் நீர் பிடிப்புள்ள பகுதிகள் மிகவும் ஏற்றவை.

வசம்பு இஞ்சி வகையைச் சேர்ந்த மூலிகை. வசம்பின் வேர்கள் பழங்காலம் முதல் மருந்துகள் தயாரிப்பதற்குப் பயன் படுகிறது. இலைகள் 2-3 அடி உயரம் வரை வளரும். வேர்கள் மஞ்சள் கிழங்கைப்போல் நெருக்கமான கணுக்களை யுடையவை. வேர்கள் பூமிக்கடியில் சுமார் 3 அடி நீளம் வரை படரும். வேர்கள் தான் வசம்பு என்பது. நட்ட ஒரு ஆண்டில் பயிர் முதிர்ந்து மஞ்சள் நிறமாக மாறும் தருணத்தில் அதாவது ஒரு ஆண்டில் கிழங்கை வெட்டி எடுக்க வேண்டும். இந்த வசம்பில் அசரோன், அகோரின் மற்றும் கொலாமினால் போன்ற வேதிப் பொருள்கள் உள்ளன. இது நல்ல வாசனையையுடையது. இது கிழங்கு மூலம் இனப்பெருக்கம் செய்யப்படுகிறது.

ஈரப்பசை உள்ள நிலப்பரப்புகளில் வளரக்கூடிய ஒருவிதப் பூண்டு வகையைச் சேர்ந்த மூலிகைத்

தாவரமே வசம்பு. உக்கிரம், வசம், வசை, வேணி, சுடுவான், உரைப்பான், பேர் சொல்லா மருந்து, பிள்ளை மருந்து, பிள்ளை வளர்த்தி ஆகிய மாற்றுப் பெயர்களும் இதற்கு உண்டு!

வருடம் முழுவதும் பயிராகக் கூடிய ஒரு வாசனைக்கிழங்கு வசம்பு (Acorus calamus). கடுமையான மணமும் கசப்புச் சுவையும் கொண்டது வசம்பு ஒரு நல்ல மருந்தாகும். இக் கிழங்கு தென் இந்தியாவில் கேரளம், தமிழ்நாடு, கர்நாடகம் ஆகிய மாநிலங்களில் அதிக அளவில் பயிர் செய்யப்படுகிறது. இது ஒரு பணப்பயிராகவும் கருதப்படுகிறது.



### மருத்துவப்பயன்கள்

வசம்பு வெப்பத்தை உண்டாக்கி பசியைத் தூண்டி வயிற்றிலே இருக்கின்ற வாயுவை அகற்றக்கூடிய தன்மை உடையது. இது வாந்தியை உண்டாக்குவதோடு நுண்புழுக்களை அழிக்கும் தன்மை உடையது. இருமல், நரம்புத் தளர்ச்சி, வாய் துர்நாற்றம், வயிற்றுப் போக்கு போன்ற நோய்களுக்கு அருமருந்தாகத் திகழ்கிறது வசம்பு.

வசம்பின் வேரும், அடிநிலமட்டத் தண்டும், இலை, பூ ஆகியவையும் பித்தப்பை, சிறுநீர்ப்பை கற்களைக் கரைத்திடும் மருந்தாகப் பயன்படுகிறது.

வசம்புத் தூளை அரைத்து வெட்டுக் காயத்தின் மேல் கட்ட காயம் ஆறிவிடும். வசம்பை சுட்டுத் தூளாக்கி சுக்கு தூளுடன் கலந்து வயிற்றில் பூசினால் உப்புசம் மாறும்.

நீரில் வசம்புத் தாள்களை சிறுசிறு துண்டுகளாக்கி போட்டு அரைமணி நேரம் கழித்து நீக்கிவிட்டு அந்த நீரில் குழந்தைகளை குளிப்பாட்டினால், தோல் நோய்கள் அண்டாது.

சிறிதளவு வசம்புத் தூளை தேனில் குழைத்து குழந்தைகளுக்குத் தர, காய்ச்சல் குணமாகும். திடீர் வயிற்றுப் போக்கு நிற்கும்.

வசம்பை சுட்டு உரைத்து, குழந்தை களைக் குளிப்பாட்டியதும் கால்களின் அடிப்பாகத்திலும் தொப்புளைச் சுற்றி தடவி வர எந்த நோயும் அண்டாது.

ஒரு துண்டு வசம்பு, ஒரு துண்டு பனை மஞ்சள் (நாட்டு மருந்து கடைகளில் கிடைக்கும்) இரண்டையும் சேர்த்து அரைத்து பொன்னுக்கு வீங்கி எனப்படும் கன்னம், கழுத்தில் ஏற்படும் வீக்கத்திற்கு பற்றுப்போட விரைவில் குணமாகும்.

வசம்பை வறுத்துப் பொடித்துக் கால் கிராம் தேனில் கொடுத்து வர சளி, வாயு ஆகியவற்றை அகற்றிப் பசியை பெருக்கும்.

வசம்பைக் கருக்கிப் பொடித்து 100 மில்லி கிராம் அளவாகத் தாய் பாலில் கலக்கி சிறு குழந்தைகளுக்குக் கொடுக்க வயிற்றுப் பொருமல், வயிற்றுப் போக்கு, வயிற்றுவலி ஆகியவை தீரும்.

வசம்பை தூள் செய்து தேனுடன் கலந்து திக்குவாய் உடையவர்கள் தினந்தோறும் காலையில் நாவில் தடவி வர பேச்சு திருந்தும்.

சகலவித விஷக்கடிகளுக்கும் இதன் வேரை வாயிலிட்டு மென்று வர விஷம் முறியும்.

Published by Dr. Durei Angusamy on behalf of 24 Manai Telugu Chettiar Charitable Trust from 155/203, E.V.R. High Road, Kilpauk, Chennai - 10. and Printed by S.Radhakrishnan at Sri Jayalakshmi Art Printers, 333, Puthu Nagar West Avenue, M.K.B. Nagar, Vyasarpadi, Chennai - 39. **Editor: Dr. Durei Angusamy**




# தாய்

வித்தாய் மடியில் வைத்தாய்; மாதம்
பத்தாய்ச் சுமந்தெனைப் பெற்றெடுத்தாய்!
முத்தாய் முல்லைக் கொத்தாய்க் கொஞ்சி
மொய்த்தாய்; நல்ல பேர்கொடுத்தாய்!
சத்தாய் உணவைச் சமைத்தாய்; பிள்ளை
சமர்த்தாய் உண்ணச் செய்வித்தாய்!
பித்தாய்க் கிடந்து பெரிதாய் அன்பைப்
பெய்தாய்; நீதான் தெய்வத் தாய்!

குழந்தாய்! என்றே அழைத்தாய்; உள்ளங்
குளிர்ந்தாய்; எனைநீ அரவணைத் தாய்!
குழைந்தாய்; பாசம் பொழிந்தாய், தேனில்
குழைத்தாய் சொல்லை நீ மொழிந்தாய்!
விளைந்தாய் மலராய் விரிந்தாய் மணமாய்
விடிந்தாய் எந்தன் பகற் பொழுதாய்!
வழிந்தாய் புனலாய் வளர்த்தாய் பயிரை
வாழ்ந்தாய் எனக்கென நாள்முழு தாய்!

நனைந்தாய் மழையில் காய்ந்தாய் வெயிலில்
நடந்தாய்; குடும்பத் தேரிழுத் தாய்!
முனைந்தாய் பணியில் சலித்தாயில்லை;
துணிந்தாய் எதற்கும் தோள் கொடுத்தாய்!
தனதாய் எதையும் நினைத்தாயில்லை;
எனதாய் எண்ணி நீ சேமித்தாய்!
சினந்தாயில்லை செய்பிழை பொறுத்தாய்;
சிரித்தாய், நீதான் பூமித்தாய்!

மருந்தாய் நோயில் விருந்தாய்ப் பசியில்
இருந்தாய்; நீயெனை வாழ்வித்தாய்!
மறந்தாய் உன்னை; நினைந்தாய் என்னை
அருந்தாய்ப் பண்பை அறிவித் தாய்!
வருந்தாய் நாளும் மெலிந்தாய் மேனி
உழைத்தாய் இரவில் துயில் நீத்தாய்!
புரிந்தாய் வினைகள் முடித்தாய் கடனை;
படுத்தாய்; ஒருநாள் உயிர் நீத்தாய்!

மறைந்தாய் மண்ணில் மடிந்தாய் எனினும்
நிறைந்தாய் நெஞ்சில் நீ நிலைத்தாய்!
பிரிந்தாய் விண்ணில் பறந்தாய் எனினும்
படிந்தாய் கண்ணில் நீர்முத் தாய்!
இறந்தால் நானும் பிறந்தால் மீண்டும்
இடந்தா! உந்தன் மடி மேலே!
இருந்தால் உந்தன் மகனா யிருக்கும்
வரந்தான் வேண்டும் புலிமேலே!



காவியக் கவிஞர் **வாலி**

